# சந்திப்பு

மாக்ஸிம் கார்க்கி

தமிழில்

ரகுநாதன்




ஸ்டார் பிரசுரம்

திருவல்லிக்கேணி
சென்னை-5



மேலக் கோபுரத் தெரு
மதுரை

மாக்ஸிம் கார்க்கி (1868-1936) உலகத்தின் முற்போக்கு இலக்கியத்தின் மூலபிதா; சிறந்த கதாசிரியர்; போராட்ட வீரர்களான, லெனின் ஸ்டாலின் முதலியோருடன் தோளோடு தோள் நின்று உழைத்தவர். மாஸ்கோவில் இவரது பெயரால் ஒரு உத்தியானவனம் இருக்கிறது; இவர் செய்த சேவையைப் பாராட்டி, இவர் பிறந்த ஊருக்கு இவரது பெயரையே சூட்டிக் கௌரவித்துள்ளனர் சோவியத் மக்கள்.

# முன்னுரை

மாக்ஸிம் கார்க்கியைத் தமிழ் வாசகர்களுக்கு அறிமுகம் செய்து வைக்கத் தேவையில்லை. வெளிநாட்டுக் கதாசிரியர்களிலேயே தமிழ் மக்களின் மனத்தைக் கவர்ந்து பேராதரவு பெற்று விட்டவர்களில் கார்க்கியே முதன்மையானவர் என்று சொல்லலாம். உலகத்தின் முற்போக்கு இலக்கியத்திற்கு மாக்ஸிம் கார்க்கியே பிதாவாக விளங்குகிறார். மக்களின் போராட்டத்தை எட்ட நின்று பார்த்து ஒட்டிப் பழகாமல், மக்களது உணர்ச்சிகளைப் பிரதி பலிப்பதாகப் பாவனை செய்யும் சீர்திருத்த வாதியாகவோ உபதேசி அவதாரமாகவோ கார்க்கி விளங்கவில்லை. மக்களது போராட்டத்தில் அவர் பங்கு கொண்டார். நசுக்கப்பட்ட மக்கள் குலத்தின் மத்தியிலேயே பிறந்து, அந்த நரக வாழ்வைத் தாமும் அனுபவித்து, அதற்கு விடுதலை காணும் இயக்க சக்தியோடு தோளோடு தோள் நின்று போராடிய வீரன் மாக்ஸிம் கார்க்கி. இவரது கதைகளின் உயிர் மூச்செல்லாம் ஒடுக்கப்பட்ட மக்களின் மனத்திலே எப்படி மனிதத் தன்மை சிறந்து விளங்குகிறது, எப்படிப் போராட்ட சக்தி உள்ளடங்கி நீறுபூத்த நெருப்பாக இருக்கிறது, என்பனவற்றை விளக்கி, அசுத்தமும் அசூயையும் புகுந்து பாழடையாத மனித இதயம் நசுக்கப்படும் மக்களிடம் தான் இருக்கிறது என்பதையும், அந்த மனித இதயத்தைச் சுரண்டல் என்னும் பளுவிலிருந்து விடுதலை பெறச் செய்ய, அந்த இதயத்தின் மீது படர்ந்துள்ள சாம்பலை விசிறி அகற்றி அதைக்கனன்றெரியச் செய்ய விடு

தலைப் பாதையில் அவர்களை எப்படிக் கொண்டு செலுத்த வேண்டும் என்பதையும் கூறி வழி காட்டும் மணி விளக்கே கார்க்கியின் சிருஷ்டிகள்.

இந்தத் தொகுதியிலுள்ள கதைகள் அனைத்திலும் கார்க்கி மனிதத் தன்மையை எவ்வளவு சிறப்பாக மதிக்கிறார்—உணர்கிறார் என்பதையே நாம் காண்கிறோம். **சிவப்பன்** என்ற கதையில் வயிற்றுப் பிழைப்புக்காக விபச்சாரத்துக்காளான ஒரு யுவதியின் நரக வாழ்வின் மத்தியிலே, அவளைக் கொடுமைப் படுத்திச் சித்ரவதை செய்யும் ஒரு முரட்டு 'ரௌடி'யின் இதயத்திலே அவர்கள் இருவரது மனித உணர்ச்சிகள், காதல் உணர்ச்சிகள் எவ்வளவு தூயதாக வெளிப்படுகின்றன என்பதைக் காண முடிகிறது. **தாலாட்டும்** ஒரு விபச்சாரியைப் பற்றிய கதைதான். குடிகாரியான விபச்சாரியின் அந்தரங்க மனத்தில் வெளிக்குப் புலப்பட முடியாத சந்தர்ப்ப பேதத்தால் எப்படிப் பிள்ளைப்பாசமும் இன்பஉணர்ச்சியும் பொதிந்து, கிடக்கின்றன என்பதை உணருகிறோம். **சந்திப்பு** அருமையான காதல் கதை. பணக்கார வர்க்கத்தின் மனப்பான்மை எப்படி ஒரு இளம் பெண்ணின் மனத்தில் தன்னையும் அறியாமல் வைரம் பாய்ந்து உரமேறியிருக்கிறது, அதனால் அவள் வாழ்க்கை எப்படிப் பாதிக்கப் படுகிறது என்ற கருத்துப் பிரதிபலிக்கிறது. வர்க்க பேதத்தை ஒழித்துக்கட்டாத வரையில் மனித உணர்ச்சிகளுக்கும் வர்க்க பேதத்துக்கும் இடையேயுள்ள முரண்பாடு நிலவி வரத்தான் செய்யும் என்ற உண்மை புலப்படுகிறது. **சங்கீதம்** ஒரு போலீஸ் அதிகாரியின் மனத்தை எப்படி நெகிழச் செய்கிறது, அது போலவே ஒரு கைதி—தான் தப்பித்துக் கொண்டு ஓடக்கூடிய சந்தர்ப்ப

வசதி கிட்டிய காலத்திலும்—தப்பி ஓடாது, அந்த சங்கீத சுகத்திலே மெய் மறந்து விடுகிறுன் என்பதைக் காண்கிறேம்.

மொத்தத்தில் இந்தத் தொகுதியிலுள்ள கதைகள் அனைத்திலும் நாம் காணுகின்ற உண்மை இதுதான். ஆபாச வாழ்க்கையில் ஈடுபட்டுள்ள விபச்சாரி, 'ரௌடி'த் தொழிலில் ஈடுபட்டுள்ள முரடன், தண்டனையை எதிர்நோக்கி நிற்கும் கைதி, முதலிய அத்தனை பாத்திரங்களிடத்திலும் அதாவது இன்றைய சமூகம் 'பொல்லாதவர்கள்' 'இழிஜனங்கள்' என்று ஒதுக்கித் தள்ளும் அத்தனை கதாபாத்திரங்களிடத்திலும் எப்படி மனிதத் தன்மையின் தூய்மையும் புனிதத்துவமும் குடிகொண்டிருக்கின்றன என்பதை நாம் உணர்ந்து அனுபவிக்கிறேம். மேலும் இந்தத் தொகுதியின் ஆசார வாசலாக உள்ள "எப்படி எழுதினேன்?" என்ற கட்டுரை கார்க்கி இந்த மனிதத் தன்மையை எப்படி உணர்ந்தார் என்பதை உங்களுக்கு நன்கு விளக்கும்.

முற்போக்கு இலக்கியம் சிருஷ்டிக்க விரும்புபவர்களுக்கு இந்தக் கதைகள் ஒரு முன் மாதிரி; முற்போக்கு இலக்கியத்தைப் 'பிரச்சார இலக்கியம்' என்று குறை கூறும் இலக்கிய சறுதனிகளுக்கு இந்தத் தொகுதி ஒரு பதில்; எச்சரிக்கை !

**ரகுநாதன்**

தமிழில்

## கார்க்கியின் பிற நூல்கள்



| | | |
|---|---|---|
| தாய் | 7 | 8 |
| இலவுகாத்த கிளி | 1 | 0 |
| லெனினுடன் சில நாட்கள் | 1 | 0 |
| அமெரிக்காவிலே | 1 | 8 |
| தந்தையின் காதலி | 1 | 0 |
| யுத்தம் வேண்டாம் | 1 | 0 |

# எப்படி எழுதினேன் ?

(மாக்ஸிம் கார்க்கி)

உயிர்வாழும் போராட்டத்தில் மனித உள்ளத்தின் தற்காப்பு உணர்ச்சி இரு மாபெரும் சிருஷ்டி சக்திகளை வளர்த்துவிட்டது, அறிவும் கற்பனையுமே இவ்விரு சக்திகள். முதலாவது சக்தியான அறிவு என்பது இயற்கை நியதியை, சமுதாய நியதியைக் கவனித்து, பொருத்தம் பார்த்து, தள்ளுவன தள்ளிக் கொள்ளுவன கொள்ளும் திறமையேயாகும்; அதாவது அறிவு என்பது சிந்திக்கும் திறனாகும். சாராம்சத்தில் கற்பனையும் சிந்தனை வழிப்பட்டதே. எனினும் கற்பிதமான உருவங்களை கலாரூபத்தில் சிந்திப்பதே கற்பனைக்குப் பிரதானம். கற்பனை என்பது மனித குண குண உணர்ச்சிகளை, ஆசாபாசங்களை முன்னிலைப் பொருள்களோடும், இடையறாத இயற்கை நியதியோடும் ஒட்டுறவாக்கிக் காணும் திறன் என்று சிலர் சொல்லலாம்.

காற்றின் முனகலையும், பழங்கதை சொல்லும் படித்துறையையும், வியர்வை அரும்பும் ஜன்னல் கண்ணாடிகளையும் நாம் கண்டிருக்கிறோம்; கேட்டிருக்கிறோம். இந்த மாதிரியான கற்பிதத்தால் நமக்கு இயற்கை நியதியை லகுவில் உணர்ந்து கொள்ள முடிகிறது.

இலக்கியப் பாணி, அதன் பாதையின் அடிப்படைத் தன்மைகள், கற்பனார்த்தமும் எதார்த்தமுமே யாகும். எதார்த்தம் என்பது வாழ்க்கைத்

தரத்தின் நிலையை வெளிப்பூச்சின்றி, ஒளிவு மறைவின்றி வெளியிடுவதாகும். கற்பனார்த்தத்தைப் பற்றித் திட்டவட்டமான திருப்தி தரும் பதில் இன்னும் அளிக்கப் பெறவில்லை. ஆகவே, பால்ஸாக், டால்ஸ்டாய், கோகோல், செஹாவ் முதலிய எழுத்தாளர்கள் கற்பனார்த்தவாதிகளா, எதார்த்தவாதிகளா என்று சொல்ல முடியவில்லை. அநேக எழுத்தாளர்களிடம் கற்பனார்த்தமும் எதார்த்தமும் இணைந்தே இருக்கின்றன.

கற்பனார்த்தத்துக்கும் எதார்த்தத்துக்குமுள்ள தொடர்பை உணர எழுதும் ஆர்வம் ஏன் வர வேண்டும்?' என்ற கேள்வியைப் புரட்டவேண்டியதுதான். இதற்கு இரண்டு விடைகள் உண்டு. ஒன்று : பதினைந்து வயதுள்ள தொழிலாளி வர்க்கப் பெண் ஒருத்தி எனக்கு எழுதினாள் : "எனக்குப் பதினைந்து வயதுதான். இந்த வயதிலேயே எனக்கு எழுதும் சக்தி வந்துவிட்டது. காரணம் எனது பஞ்சை நிலையும் சலித்துப்போன உயிர் வாழ்க்கையும்தான்." இன்னொரு எழுபது வயதுக் கிழத் தொழிலாளி எழுதுகிறான் : "எனக்குள்ள அனந்த கோடி அனுபவங்களை எழுதாமலிருக்க முடியவில்லை!"

என்னோடு கடிதப் போக்குவரத்து வைத்துக் கொள்பவர்கள் எழுத்தாளனாக ஆசைப்படுவதன் காரணம் அவர்கள் மனத்தில் புகைமுட்டித் தவிக்கும் அனந்தகோடி அனுபவங்கள் இருப்பதனால்தான். தாங்கள் கண்டும் கேட்டும் அனுபவித்தும் வந்த இன்ப துன்பங்களை அவர்களால் எழுதாமலிருக்க முடியவில்லை. ஆகவே எப்படி எழுதினேன்

என்ற எனது கேள்விக்கு நானும் "வறுமையில் வாடினேன்; எனக்கும் பல்வேறு அநுபவங்கள் இருக்கின்றன. அந்த உணர்ச்சிப் படங்களை என்னுல் தீட்டாமல் இருக்க முடியவில்லை" என்றே சொல்வேன்.

வாழ்வின் பயங்கரத்தைப் பற்றி எனக்கு அநேக அனுபவங்கள் உண்டு. இப்போது நான் அதைக் குருட்டுப் பயம் என்கிறேன். இளமை அனுபவத்தில் நான் கண்ட அனுபவங்களைச் சொல்லப் போனுல், நீங்கள் பார்த்திராத கீழ்த்தரமான அனுபவங்களாகவே இருக்கும். சில வேளைகளில் இந்தக் கைப்பான வாழ்க்கை எனது உணர்ச்சிகளை மழுங்க அடித்து என்னை ஒரு தூங்கிணியாக்க முயன்றதுண்டு. சில சமயங்களில் அவை என்னைக் கிண்டி விட்டு எனது மான உணர்ச்சியைத் தூண்டியதுமுண்டு. ஆகவே இதற்கு ஒரு மார்க்கம் தெரியாமல், இரவில் கூரையேறித் திரிவதும், தாத்தா செய்யும் வேலையில் கரியை அள்ளித் தூவுவதுமாக இருந்தேன். இதை யெல்லாம் நான் ஏன் செய்தேன் என்ருல் நான் உயிருள்ள பிராணி என்று காட்டிக்கொள்வதற்குத்தான். கண்ணைக் கட்டிக் காட்டில் விட்ட மாதிரி இருந்த இந்த வாழ்வை மாற்றவேண்டுமென்று நினைத்தேன்.

சரி. இனி நான் எப்படி எழுதப் படித்தேன் என்பதற்கு வரலாம். எனக்கு ஏற்பட்ட அனுபவங்கள் புத்தகங்கள் மூலமாகவும் வாழ்க்கையின் மூலமாகவுமே கிடைத்தன. நான் வெளிநாட்டு இலக்கியங்களுக்கு—முக்கியமாக பிரெஞ்சு இலக்கியத்துக்கு—மிகவும் கடமைப்பட்டவன். என் தாத்தா ஒரு கஞ்

சன்! ஆனால் நான் அவரை பால்ஸாக்கின் 'கிராண்டெட்' என்ற கதாபாத்திரத்தின் மூலமே புரிந்து கொண்டேன். அதே மாதிரி என் தாத்தாவின் நண்பர்கள் தாக்கரேயின் 'வானிட்டிபேரி'ல் (Vanity Fair) பேசுவதுபோலவே பேசினார்கள். இப்படித் தான் பல அனுபவமும்.

எனது படிப்பு ஒழுங்குமுறையற்றது; கிடைத்த போது சமயம் வாய்த்தபோது படித்தேன். வெளி நாட்டு இலக்கியம் எனக்கு ஒப்புவமை நோக்குவதற்கு ஏராளமான விஷயங்களையும், விஷயத்தை எடுத்துச் சொல்வதையும், கதா பாத்திரத்தைத் தொட்டுப் பழகும் பாணிகளையும் சொல்லிக் கொடுத்தது. ஒரு தடவை பிளாபேரின் 'சாதாரண இதயம்' (A Simple Heart) என்ற நூலைப் படித்தேன். அதைப் படித்துக் கண் மூக்குத் தெரியாமல் ஆடினேன். சர்வசாதாரணமான, நாமறிந்த, வார்த்தைகளை வைத்துக்கொண்டு எப்படி ஒரு சாதாரண விஷயத்தை ரசமாகச் சொல்ல முடிகிறது என்று அதிசயித்தேன். எனக்கு அது ஒரு புதிராக இருந்தது.

நான் படித்த பிற இலக்கியங்கள் இருக்க, பிரெஞ்சு இலக்கியத்திலிருந்துதான் எழுதக் கற்றுக் கொண்டேன். இது தற்செயலாக நடந்தபோதிலும், இளம் எழுத்தாளர்கள் கட்டாயம் பிரெஞ்சு இலக்கிய மேதைகளின் நூல்களைப் படித்து அவர்களின் சொல்லாட்சிக் கலையை உணர்ந்துகொள்ள வேண்டும் என்றே சொல்வேன்.

எனக்கு இருபது வயது ஆனபோது, நான் கண்ட, கேட்ட, அனுபவித்த பல விஷயங்களை மற்ற

வர்களுக்கும் சொல்லித்தாஞக வேண்டும் என்று கருதினேன். ஏனெனில் மற்றவர்களின் மனப் போக்குக்கு மாருக நான் புது வழியில் சில விஷயங் களைக் கண்டுைக்குகிறேன் என்று எனக்குப் பட்டது. இதற்கிடையில் நான் வசித்த இடத்தில் உள்ள பாட்டாளி வர்க்கத்தினர் நான் கதை சொன்ஞல் கூர்ந்து ஆர்வத்தோடு கேட்க ஆரம்பித்தனர். புத்த கங்களைப் பற்றியும் சொல்வேன். எனது கதைகளைக் கேட்ட அறிவாளிகள் 'எழுது! எழுதப்பா எழுது" என்று தூண்டிஞர்கள்.

அடிக்கடி எனக்குக் குடி மயக்கம்போல் நான் அனுபவித்த இன்ப துன்பங்களை வெளியிட்டுத் தீர்க்க எண்ணும் ஆர்வம் மனத்தைப் பிய்த்துப் பிடுங்கும். இந்த அவஸ்தையைச் சொல்லித்தான் தீர்க்க விரும்பினேன். ஆகவே தான் என் மனத்தில் உறைந்து போன சித்திரங்களான என் நண்பன் அனடோலி, சந்துமுனைத் தாசி மகளான தெரஸா முதலியவர்களைப் பற்றி எழுத விரும்பினேன். அவர் களைப் பற்றிச் சில பாடல்கள் எழுதினேன்.

பாடல் எழுதுவது எனக்குச் சுலபமாகக் கை வந்தது. எனினும் அவை மோசமானவை. என்னு னுடைய சக்தியின்மையை, திறமை இன்மையை நானே உணர்ந்தேன். புஷ்கின், லெர்மெண்டோவ், குரோச்கின் முதலிய கவிஞர்களைப் படித்தபோது நான் ஒரு உதவாக்கரை என்றே பட்டது. நாஞே வசனம் எழுதுவதற்கே பயந்தேன்; பாடலைவிட வசனம் எழுது வது சிரமம் எனக் கருதினேன். இதன் விளைவு நான் வசன கதி படைத்த பாடலாய் எழுதியதுதான்

அந்த சிருஷ்டியை கோரோலெங்கோ நொறுக்கித் தள்ளிவிட்டார்.

இங்கு, மொழி என்பது மக்களால் ஆக்கப்பட்டது என்பதைச் சொல்வது பிரயோஜனகரமாயிருக்கும். இலக்கிய மொழி யென்றும் கொச்சை மொழி யென்றும் பாகுபடுத்துவ தென்பது, இலக்கிய மேதைகளின் கைவண்ணத்தால் மெருகு பெற்ற மொழியையும் பேச்சு மொழியையுமே குறிக்கும். இதை முதன் முதலில் உணர்ந்தவர் கவிஞர் புஷ் கினே; அவர்தான் மக்கள் பேசும் மொழியையும் மெருகிட்டுப் புதுமை பெறச் செய்ய முடியும் என்ப தைக் காட்டினுர்.

எழுத்தாளன் என்பவன் அவனுடைய நாட்டின் வர்க்கத்தின் உணர்ச்சி மயமான ஊது குழல்; அதன் செவி, கண், இதயம் எல்லாம் அவன்தான். அவன்தான் அவனது சகாப்தத்தின் குரல்! அவன் பழமையைப் பற்றி எவ்வளவு தெரிந்து கொள்ள வேண்டுமோ அவ்வளவு தெரிந்துகொள்ள வேண்டும். அப்போது தான் நிகழ் காலத்தில் தனது சமுதாயத் தின் முன்னுள்ள கடமைகளை வரையறுக்கவும், நிறை வேற்றவும் முடியும். அவனுக்கு மனித சரித்திரம் தெரியவேண்டும். மக்கள் எப்படிச் சிந்திக்கிறுர்கள் என்பதை உணர அவர்களது பழமொழிகளையும், கதைகளையும் தெரிந்துகொள்ள வேண்டும். நானும் அதைத்தான் செய்தேன்.

இளைஞர்களாகிய நீங்கள், நான் ஏன் பஞ்சைப் படையினங்களைப் பற்றி எழுத வேண்டும் என்று கேட்பீர்கள். கீழ்த்தர மத்தியதர வர்க்கத்தினரோடு

பழகிய தோஷத்தால் அந்த வர்க்கத்தைச் சூழ்ந்துள்ளவர்கள்; அவர்களை எப்படிக் கொக்கியிட்டு வதைக்கிறார்கள், அவர்களது வியர்வையையும் குருதியையும் எப்படி காபெக்குகளாகவும், ரூபிள்களாகவும் (காபெக், ரூபிள்—ருஷ்ய நாணயங்கள்) மாற்றுகிறார்கள் என்பதையும் எனது பதினைந்தாவது வயதிலேயே நேரில் அனுபவித்தேன். ஆகவே, இந்தப் புல்லுருவிகள் வாழ்க்கையைக் கண்டு மனம் புழுங்கினேன்.

பஞ்சைப் பரதேசிகள் என்பவர்கள் என்னைப் பொறுத்த வரை சாதாரண மனிதர்கள். ஏனெனில் அவர்கள் வர்க்கம் இழந்தவர்கள்; அவர்கள் வர்க்கத்தின் தன்மையை இழந்தவர்கள் இப்படிப் பட்ட பலரை நான் வழியில் சந்தித்திருக்கிறேன். நானும் இன்னொரு மனிதனும் ஆஸ்பத்திரியில் சீக்காகக் கிடந்தபோது அவன் சொன்ன கதையைத்தான் நான் எனது 'செல்காஷ்' (Chelkash) என்ற கதைக்குப் பயன்படுத்தினேன். அவன் அலெக்ஸாண்டர் டூமாஸின் "மகா வீரக்" கதாநாயகர்களை நினைவூட்டினான். ஆகவே தான் இந்தப் பஞ்சைப் பரதேசிகளின் சாதாரண வாழ்வைப் பிரதிபலிப்பதில் என் மனம் நாடியது. இவர்களைவிட, குட்டி பூர்ஷ்வா மனப்பான்மை கொண்ட மக்கள் என்னை அதிகம் கவரவில்லை.

என்னைப் பொறுத்த வரையில், மனிதனை மிஞ்சிய கருத்துக் கிடையாது. மனிதன்தான்—மனிதன் மட்டும்தான் சகல பொருள்களுக்கும் கருத்துக்கும் சிருஷ்டி கர்த்தா. அவனே மாயாஜாலன்.

அவனே இயற்கையின் சகல சக்திகளுக்கும் எதிர் கால எஜமான். நமது உலகில் உள்ள அழகிய பொருள்களெல்லாம் நமது உழைப்பின் சிருஷ்டி; மனிதக் கரங்களின் படைப்பு. நமது கருத்துக்கள் எண்ணங்கள் எல்லாம் தொழில் வளர்ச்சிப் போக்கிலிருந்து உற்பத்தியானவை. பிரத்தியக்ஷ உண்மைகளிலிருந்துதான் எண்ணங்கள் பிறக்கின்றன. நான் மனிதனுக்குத் தலை வணங்குகிறேன். ஏனெனில் அவனுடைய அறிவுக்கும் கற்பனைக்கும் அமைந்துவிடாத எந்தப் பொருளையும் நான் காணவில்லை.

# சந்திப்பு

ஆற்றங்கரையை ஒட்டிய தோப்பின் ஓரத்தில் அமர்ந்து நீரில் தெரியும் தன் பிரதிபிம்பத்தைக் கவனித்துக் கொண்டிருந்தாள் ஒரு குடியானவக் குமரி. அவளைச் சுற்றிலும் பரந்திருந்த மணல் வெளியில் பழுத்து மஞ்சளாய்ப் போன இலைகள் சிதறிக்கிடந்தன; பழுப்பிலைகள் எந்தவித அரவமுமின்றி அவளது தலைக்கு மேலாக உதிர்ந்து விழுந்து அவளது தோளிலும் துணியிலும் பதிந்து உட்கார ஆரம்பித்தன. பல இலைகள் அவளது முந்தியில் விழுந்து கிடந்தன. அந்த இலைகளில் ஒன்றையெடுத்து, அதைத் தன் விரல்களால் சுற்றிச் சுழற்றிக் கொண்டிருந்தாள்; மற்றொரு கையில் நீண்டு வளர்ந்து நெளியும் ஒரு கொடி மிளாரை வைத்திருந்தாள். அவள் உயரமாகவும் ஊதிப்பாகவும் இருந்தாள். குடியானவர்கள் அணியும் ஆடைகளில் அவள் அணிந்திருந்தது உயர்தரமான ரகம்; எனினும் அவளது உருண்ட முகத்தில் சோகம் பிரதிபலித்தது. நீர்ப் பரப்பின் மீது நிலைத்து நின்ற அவளது கண்கள் தீக்ஷண்யமும் திடமும்கொண்டு சிந்தனை வயப்பட்டிருந்தன.

கரையருகே சமீபத்தில் தான் மயிர் கத்தரித்துவிடப்பட்ட ஆடுகள் இலைகளை மேய்ந்துகொண்டிருந்தன; அவையனைத்தும் துரதிருஷ்டசாலிகளைப் போல் அனுதாபத்துக்குரியன போல் தோன்றின. ஆற்றுக்கு அப்பாலுள்ள மரங்கள் இலையுதிர் காலத்தின் வர்ணமாற்றத்துக்கு ஆளாகி, பழுப்பு நிறத்துக்கு அடிமையாகிக் கொண்டிருந்தன. செக்கச் சிவந்த ரோவான் கொத்துக்கள் ரத்தக் காயங்களைப் போல் துருத்தி நின்றன. அன்றைய தினம் அமைதியும் சூரிய ஒளியும் கதகதப்பும் நிறைந்த தினம்; செல்லாகிப் போகும் பருவ காலத்தின் சோகச் சூழ்நிலை நிறைந்து நின்ற நாள்.

அந்தப் பெண்ணுக்குப் பின்னல் கிடந்த இலைகள் சலசலத்தன; ஒரு நெட்டையான வாலிபன் அவளருகே நெருங்கி வந்தான். சூரிய ஒளியில் பதப்பட்டுப்போன அவனது முகத்தில் இளந்தாடி முளைத்திருந்தது; அவனது காலில் ஜோடுகள் இல்லை; ஆடையும் கிழிந்து தும்பாய்ப் போன கந்தல்தான்.

அந்தப் பெண் அவனைப் பரிபூரணமாகப் பார்க்காது முகத்தை லேசாகத் திருப்பிக் கொண்டு தணிந்த குரலில் பேசினுள்:

"நான் ரொம்ப நேரமாய்க் காத்திக்கிட்டிருக்கேன்..."

அந்த வாலிபன் அவளுக்குப் பக்கத்தில் மணலில் உட்கார்ந்தான். ஆட்டுத் தோலாலான பாதரட்சைகள், பழுப்பு நிறமான தலைக்குட்டை, கண்ணைப் பறிக்கும் நிறம் படைத்த சீட்டித் துணியாடை—அவன் அவளது கோலாகலமான அலங்காரத்தை ஏற இறங்கப் பார்த்து முடித்தான். பிறகு அவளிடம் சிரித்துக் கொண்டே பேசினுன்.

"இன்றைக் கென்ன? நீ ஒரே அழகு சொரூபமாக இருக்கிருயே !"

ஆனால், மறுகணத்திலேயே உணர்ச்சி நிறைந்து ஒளி சிதறும் அவனது பிரகாசமான கண்கள் அந்தக் குமரியின் அகன்று விரிந்த நீலக் கருமணிகளில் படர்ந்துள்ள சோக பாவத்தைக் கண்டுவிட்டன. பதறிப்போய்த் தலையைச் சிலுப்பிக்கொண்டே அவன் அவளிடம் சத்தமாகக் கேட்டான்.

"என்ன விஷயம்? நீ அவரிடம் சொல்லிவிட்டாயா ?"

"ஆமா"

"சரி, அவருக்கு ரொம்பக் கோபம் வந்துதோ?"

"அவர் என்னை அடிச்சார்!"

"கிழட்டுப்பிசாசு! அப்படியா?...சரி. பிறகு என்ன சொன்னுர் ?"

"நீ ரொம்ப ஏழைன்னு..." அந்தப் பெண் பெருமூச்செறிந்துகொண்டே மீண்டும் நீர்ப்பரப்பில் பார்வையைச் செலுத்தினுள்.

அந்த வாலிபன் தலையைத் தாழ்த்திக் கொண்டே சொன்னான்.

"ச-ரி-த்தான்!......அவர் சொன்னது நிசம்...இல்லையா?"

அங்கு மேய்ந்து கொண்டிருந்த ஆடுகளில் ஒன்று அவர்களது பக்கமாக வந்தது; வாயிலுள்ள இரையை அசை போட்டுக்கொண்டே, பஞ்சடைந்த தன் குறு குறுத்த கண்களால் அவர்களை ஏறிட்டுப் பார்த்தது—ஒரு மீன் ஆற்று நீரில் துள்ளிப் பாய்ந்தது; அதன் துள்ளலால் தெறித்துச் சிதறிய நீரில் சூரிய ஒளி வெள்ளி மயமாக மின்னி மினுக்கிச் சொடுக்கி மறைந்தது. தூரத்தில் எங்கோ யாரோ ஒரு ஆர்மோனியத்தை வாசித்துக்கொண்டிருந்தார்கள். ஒரு மாடு கனைத்தது; ஒரு நாய் கோபாவேசமாகக் குலைத்தது. பூம் பூம் என்ற தமர ஒலி மங்கிப் போய் எதிரொலித்துக் கொண்டிருந்தது.

"நான் ஏழைதான். அது நிசம்; ரொம்ப நிசம்தான். ...நான் வேறே எப்படி இருக்கமுடியும்? என் உடம்பு நல்ல ஸ்திதியிலே இருக்கு என்பதைத் தவிர வேறே எனக்குன்னு ஒரு ஸ்திதி இல்லை...என்றாலும் நம்ம ரெண்டு பேரும் எவ்வளவு நல்லா வாழ்ந்திருக்க முடியும்! இல்லையா, பாலஷ்கா!"

அவன் அவளது தோள்களைத் தொட்டுக்கொண்டே அவளது முகத்தைப் பதிலை எதிர் பார்ப்பது போல் பார்த்தான்.

"அவர் என்ன சொன்னார் தெரியுமோ? 'அவனைப் பத்தி எனக்கு எல்லாம் தெரியும். ஒரு பணக்காரக்-குடியானவனுக்கு அவன் ஒன்றும் மருமகனாக வரப் போறதில்லை.' அப்படின்னார்" அந்தப் பெண் திடீரென்று உணர்ச்சி பரவசமாகி, "அவன் ஒரு பிச்சைக்காரப் பயல். அவன் என்னிடம் வேலைக்காரனாக இருக்கக் கேட்கலாம். என் மருமகனாக இருப்பதற்காக அில்ல...அப்படின்னும் சொன்னார்?" என்று சொன்னாள்.

"சரி, நீ என்ன பண்ணினே?" என்று சோர்ந்து போய்க் கேட்டான் அந்த வாலிபன்.

"நீ என்னதான் நினைச்சிருக்கே என்று நான் சத்தம் போட்டேன்."

"ம்...சரி. நீ அவரிடம் என்ன சொன்னே?"

"நான் என்னத்தைச் சொல்றது? நான் உன்னைத் தான் காதலிக்கிறேன். வேறே யாரையும் கல்யாணம் பண்ணிக்க மாட்டேன்கிறதைத் தான் சொன்னேன்."

"அதுக்கு என்ன சொன்னார்?"

"அதுக்குத்தான் அவர் என் தலைமீது ஓங்கி அடிச்சார்; என் தலை மயிரைப்பிடிச்சு இழுத்தார். 'உன் நாக்கை நறுக்கித் தூர எறிஞ்சுடுவேன். இனிமே அவன் பேரைச் சொன்னே—இருக்கு' என்று எரிஞ்சு விழுந்தார்."

"என் பெயரையா?" என்று ஏகத்தாளமாகச் சொல் லிக் கொண்டே அவன் நீரில் காரி உமிழ்ந்தான்.

"ஆப்புறம், அம்மா என்மீது பாய ஆரம்பிச்சிட்டாள். 'நாம் நல்ல தசையிலே இருக்கோம். நமக்கு அந்தமாதிரி யான ஆள் மருமகனாக வரலாமோ? நமக்கென்ன வேறே மாப்பிள்ளை கிடைக்காமலா போச்சி' அப்படின்னு."

அந்தப் பெண் பேசிய பாவனையைப் பார்த்தால் அவளே அதை யெல்லாம் ஒப்புக் கொள்வது மாதிரித் தோன்றியது...அவள் முகத்தை வக்கிரமாகச் சுழித்தாள்; அவளது தாயும் தந்தையும் எந்த மாதிரி பேசினார்களோ அதைப்போலவே கோபம் தாபம் தீர்மான பாவத்துட னேயே அவற்றைச் சொல்ல அவள் அரும்பாடுபட்டாள்.

அந்த வாலிபன் அவள் சொன்னதை யெல்லாம் அமைதியாகக் கேட்டான்; அவனது கால்களால் மணலை அழுத்தி மிதித்துக் குழி பறித்துக் கொண்டிருந்தான்.

ஒரு பறவைக் கூட்டம் ஆற்றுப் பரப்புக்கு மேலாகக் கீச்சிட்டுக் கொண்டு பறந்து சென்றது; அந்தப் பறவைக் கூட்டத்தை அவனது கண்கள் தொடர்ந்து சென்றன. ஆற்றுக்கு அப்பாலுள்ள காட்டுக்குள் அவை பறந்து கண் மறைந்தவுடன், அவன் கேலி தொனிக்கும் பாவனை யில் பேச ஆரம்பித்தான்.

"என் தலைவிதி என்னன்னு எனக்குத் தெளிவாத் தெரியுது—இந்த வயல் வெளி மீது வீசும் காற்றை நீ

எப்படிக் கட்டிப் பிடிக்க முடியாதோ, அது போலவே அந்த விதியையும் உன்னுல் ஒன்றுமே செய்ய முடியாது!''

அந்தப் பெண் அவனை ஆர்வத்தோடும் சோகத்தோடும் பார்த்தாள்; பெரு மூச்சு விட்டாள். அவனே தூர தொலைவை வெறித்து நோக்கிக் கொண்டிருந்தான்.

''உங்க அப்பா அப்படிச் சொன்னு, அப்படித்தான் நடக்கும். அவர் மனத்தை நீ ஒண்ணும் மாத்திட முடியாது. அவர் அவ்வளவு தீர்மானமா யிருக்கார். நீ அவர் தலைமேலே தடிகொண்டு தாக்கினுலும், கிழட்டுப் பிசாசு! அது ஒண்ணும் அசைந்து கொடுக்கப் போறதில்லை...இல்லையா? அவர் ஒண்ணும் விட்டுக் கொடுக்க மாட்டார்.''

''அவர் மாட்டார்? நான் என் கண் முழி பிதுங்கக் கதறிக்கூட அவர் மனசு இளகக் காணமே?'' என்று தலையைக் குலுக்கிக் கொண்டே அந்த யுவதி பெரு மூச்சு விட்டாள்.

''சரி, இதுதான் முடிவு. நாம் அதிர்ஷ்டக் கட்டைகள். இல்லையா, பாலஷ்கா; இதுதான் நம்ம தலை விதி. இல்லையா?''

''சரி. நாம் இனி என்ன பண்ணுகிறது?'' என்று தணிந்து துயரம் தோய்ந்த குரலில் கேட்டாள் அவள்.

''என்ன நினைக்கிறே? நான் இங்கேருந்து போயி, எங்காவது ஒரு பாக்டரியிலே வேலை பார்க்கப்போறேன், அந்த வேலையும் புடிக்கலேன்னு, வேறே எங்கேயாவது போவேன்...அதனுலே...இப்போ நாம் ஒருவருக் கொருவர் விடை பெற்றுக்கொள்ள வேண்டியது தான்!''

அவள் அவனைத் தனது அகன்ற கண்களால் வெறித்துப் பார்த்தாள்; மறு கணம் அரவமின்றித் தன் முகத்தை அவனது மார்போடு புதைத்துக் கொண்டாள்.

அவன் ஒரு கரத்தால் அவளை வளைத்து அணைத்தான்; நடு நடுங்கும் அவளது தோள்களைப் பார்த்தான்; பிறகு தெள்ளத் தெளிவாக ஓடிக்கொண்டிருக்கும் நீர்ப் பரப்பில் தங்கள் இருவரது உருவங்களும் கண்ணுடியில் தெரிவதுபோல் பிரதிபலிப்பதைப் பார்க்க ஆரம்பித்தான்.

"நான் என்மனத்தில் எத்தனை தடவை எப்படி யெப்படி யெல்லாமோ கற்பனை பண்ணிப் பண்ணிப் பார்த்திருக்கேன் என்பதும் உனக்குத் தெரியும். நம்ம ரெண்டு பேரும் கல்யாணம் பண்ணிக்கிட்டு, ஒண்ணு உழைக்கிற மாதிரி யெல்லாம்..."

அவன் பேச்சை நிறுத்தினான். ஒரு வேளை, தன் மார்போடு முகத்தைப் புதைத்துக் கிடக்கும் அந்த யுவதியைத்தான் கல்யாணம் பண்ணி வாழ்வதாக அவன் மீண்டும் "கற்பனை" பண்ணிப் பார்த்திருக்கலாம்; அல்லது ஒரு வேளை அவனால் இனிமேல் தான் எதையுமே கற்பனை பண்ணிப் பார்க்க முடியாது என்பதை யேனும் அவன் சிந்தித்திருக்கலாம்.

"ஆமாம். உதாரணமாக, நான் கதிர் அறுப்பது மாதிரி, நீ கதிரடிப்பது மாதிரி. அல்லது நான் சூடடிப்பது மாதிரி நீ பூப்புடைக்கிற மாதிரி...அதையெல்லாம் விட்டுத் தள்ளு. நம்ம ரெண்டுபேரும் குழந்தைகளைப் பெத்தெடுத்து, சுகமா வாழறமாதிரி...ஒன்று அல்லது ரெண்டு பசு அத்தோடே சில ஆடுகள்...அதையெல்லாம் நினைச்சுப் பார்த்தால், இப்போக்கூட உனக்கு ஆனந்தமாயிருக்கும்."

அந்தக் குமரி வாய் விட்டுப் பொருமினாள்; தனக்கு நெருங்கிய உறவில் யாரேனும் இறந்துவிட்டால் ஒரு கிராமப் பெண் எப்படி யழுவாளோ அந்தமாதிரி பொருமினாள்.

"அழாதே, அழுது என்ன ஆகப் போகிறது?" என்று அமைதியுடன் சொல்லிக்கொண்டே அவளைத் தன்னோடு அணைத்துக் கொண்டான் அவன்.

"ஸ்டீபன்...என் அருமை!...எனக்கே சொந்தமான." அவள் தன் பொருமலுக்கிடையே ஏதேதோ புலம்பினாள்.

அவர்களுக்கு மேலாக ஆற்றங்கரைத் தோப்பின் பழுத்த இலைகள் சோக மயமாக வட்டமிட்டுச் சுழன்று வாடி யுதிர்ந்தன; மெதுவாகத் தடவிச் செல்லும் மெல்லிய காற்றினால் ஆற்று நீர்ப்பரப்பில் இளஞ் சிற்றலைகள் பிறந்து ஓடின.

''எல்லாம் சரியாப் போகும்'' என்று அந்த இளைஞன் தைரிய மூட்டும் குரலில் சொன்னான். ''என்னைப் பத்தி நினைச்சால் ஆரம்பத்திலேதான் உனக்குக்கொஞ்சம் துயர மாக இருக்கும்; பிறகு அது பழகிப்போயிடும். பெண்களே எதையும் பழக்கத்தில் சமாளித்துக் கொள்ளக் கூடியவங்க தான். நீ என்னை மறந்துடுவே. அதுதான் முடிவு. நான் ஒருத்தன் இருந்தேன்கிறதையே நீ மறந்து போயிடுவே.''

''ஸ்டீபன்! இந்த மாதிரியெல்லாம் பேசாதே. ஒரு போதும்...ஒருபோதும் உன்னை நான் மறக்க மாட்டேன். நீ இல்லாமெ நான் எப்படி உயிரோடிருக்கிறது? நெஞ் சிலே இருதயம் இல்லாம வாழ்ற மாதிரியல்ல இருக்கும்?''

''உனக்குக் கல்யாணம் ஆகும்; எல்லாம் ஒண்ணு தான்'' என்று துக்கம் தோய்ந்த புன்னகையோடு சொன் னான் இளைஞன்.

''மாட்டவே மாட்டேன். இந்த உலகத்தில் நான் வேறு யாரையும் கல்யாணம் பண்ணிக்கவே மாட்டேன்?'' என்று பரிதாபமாகக் கதறினாள் அந்தப் பெண்.

''கல்யாணம் பண்ணிக்கச் சொல்லி அவங்க உனக்கு உத்தரவு போடுவாங்க. நீயும் அதன்படி செய்வே. அவங்க என்னைக் கட்டிக்கக் கூடாதின்னு சொன்னாங்க; நீ அதுக் குப் பணிஞ்சு கொடுத்தே, வேறொருத்தனைத் தான் கட்டிக் கணும்னு சொல்வாங்க; அதுக்கும் நீ பணிஞ்சி தான் குடுக்கப்போறே. அது அப்படித்தான் நடக்கும். நீ காலம் முச்சூடும் கவலைப்பட்டுக் கொண்டிருக்க முடியாது!''

''ஆனால், நீ ஏன் வேறெ இடத்துக்குப் போகப் போறே, ஸ்டீபன்? இங்கே யாச்சும் தங்கியிரேன். உன் னைத் தூரத்தில் வைத்துப் பார்த்தாவது என் மனசை ஒரு கணமாவது தேத்திக்கிட மாட்டேனா? இனிமே என் வாழ்க்கை எப்படிப் போகப்போகிறது?''

அவன் அவளது இரங்கும் சொற்களைக் கேட்டான்; அவளது முகத்தை இளம் புன்னகை ததும்பப் பார்த்தான்; ஆழ்ந்த பெருமூச்சு விட்டான்.

''நான் எதுக்காக இங்கே தங்கணும்? பாலாஷ்கா! நீ பேசறது ஒண்ணும் சரியாப் படலே. நான் இங்கேயே

இத்தனை நாளும் இருந்தேன்னு அதுக்குக் காரணம் நான் இளைஞனாயிருந்தேன்; நீயும் இருந்தே. உன் கிழட்டு அப்பா அவ்வளவு மோசமான ஆசாமியாக இருக்க மாட்டார்னு நினைச்சேன். முதல்லே எதிர்த்தாலும் பின்னால் வழிக்கு வந்திடுவார்னு நினைச்சேன். ஆனால், இப்போதோ நான் நினைச்சது தப்புன்னு தெரிஞ்சிபோச்சி. ஐவான் மாமா என்னைப் பத்தி ஒண்ணுக்குப் பத்துத் தடவை அவரிடம் சொல்லிப் பாத்திருக்கார்; இருந்தாலும் அவர் விட்டுக் கொடுக்கலெ. காது கொடுத்துக் கெட்கலெ...நீங்கள்ளாம் பணக்காரங்க... அதுனாலே உங்களுக்கெல்லாம் ஒரே பெருமை, கௌரதை ஆகையினாலே, நான் எங்கேயாவது போயித்தான் ஆகணும்...மேலும்...உன்னை வேறெ ஒருத்தனுக்குக் கல்யாணம் செய்து கொடுக்கிறதையும் நான் பார்க்க விரும்பலை. பார்க்கவே விரும்பலே!''

''நீயும் தானே ஒரு வேளை கல்யாணம் பண்ணிக்குவே!'' என்று மெல்லிய குரலில் சொன்னாள் அந்தக் குமரி.

''நான் அதைப்பற்றி ஒண்ணும் நினைக்கலே. ஆனா உன் விஷயமா இருந்தா, அது வேறெ விஷயம். ஏனென்றால் நீ அழகான பொண்ணு...நல்ல ஆரோக்கிய முள்ளவள். வேலை செய்யணும்கிற அக்கறை இல்லே. நாம் ரெண்டு பேரும் ஒண்ணாப் போயிருந்தா அது நல்லாயிருந்திருக்கும்!''

மீண்டும் ஒரு முறை அவன் பெருமூச் செறிந்தான் பிறகு மௌனமானான்.

''ஸ்டீபன்!'' என்று அவள் அழுத்தத்தோடு கூப்பிட்டாள்.

''இது இப்படித்தான் நடக்கும். எனக்குக் கல்யாணம் ஆகிறதையும் நீ விரும்பலே; உனக்குக் கல்யாணம் ஆகிறதையும் நான் விரும்பலே. நம்ப ரெண்டு பேரும் கல்யாணம் பண்றத்துக்கு முன்னால் எப்படியிருக்கணும்கிறதையே நீ தெரிஞ்சிக் கிட்டதாகத் தெரியலே. ஆனா, மத்தவங்களுக்குத் தெரியும். ஒரு பெண்ணுக்கு, குடும்பப் பாங்கு தெரிஞ்சிருந்தா, அவள் விரும்புறமாதிரியே கல்யாணமாகிப்

போயிடும். உனக்கு அந்த வழியும் தெரியலே, என்னையும் பரிபூரணமாகக் காதலிக்கலே......என்னமோ..."

"ஸ்டீபன்!" என்று அழுது கேவிக்கொண்டே அவனது முகத்துக்கு நேராகத் தன் கண்களை உயர்த்தினாள் அவள். "ஆனா, நீ கல்யாணமே பண்ணிக்காம இருந்தா, அது பாவம்...பாவகாரியம்...எப்படிப் போனாலும் நான் ஏதாவது தில்லு முல்லு பண்ணினா என்னை அவங்க அடிச்சு நொறுக்குவாங்க, நொண்டியாக்குவாங்க...எப்படியும் உன்னை நான் கல்யாணம் பண்ணிக்காதபடி செஞ்சுப்புடுவாங்க."

"சரி" என்று அமைதியாகச் சொன்னான் அந்த இளைஞன். "அது உன் காரியம். அதை நீ தான் முடிவு செய்யணும். நீ மட்டும் என்னை நிசம்மாவே காதலிச்சேன்னா, ஒண்ணுரெண்டு அடிபட்டால்தான் என்ன மோசமாப் போச்சு? ஒண்ணும் குடி முழுகிப்போயிடாது!"

அவள் மீண்டும் அழ ஆரம்பித்தாள்; அவனைவிட்டு விலகிப் பிரிந்து திரும்பிக்கொண்டாள். அவன் மேலைத் திசையில் மூழ்கிக் கொண்டிருக்கும் சூரியனைக் கையால் முகத்துக்கு நிழல்கொடுத்து ஏறிட்டுப் பார்த்தான். பிறகு மெதுவாகச் சொன்னான்:

"மணியும் நாலுக்கு மேலே இருக்கும் போலிருக்கு. தேவாலய பூஜைக்கு சீக்கிரம் மணியடிச்சிடுவாங்க. நாளைக் காலையிலே நான் அதிகாலையிலேயே எழுந்திருப்பேன். உடனே புறப்பட்டுப் போயிடுவேன். அத்தோடு இந்த விஷயமும் ஒரு வழியா முடிஞ்சி போயிடும்!"

"அதைப்பத்தி, என்னைப்பத்தி நீ வருத்தம் கூடப் படமாட்டியா?" என்று கண்ணீர் ததும்பிய கண்களோடு கேட்டாள் அவள்.

"வருத்தப்படுவேனோ இல்லையோ, அது என் கவலையில்லே!" என்று சோர்ந்து சோகக்குரலில் சொன்னான் அவன்.

அவன் தண்ணீரைப் பார்த்தான். அந்தப் பெண் தன் இருகரங்களாலும் முகத்தை மூடிக்கொண்டு தலை இங்குமங்கும் அசைந்தாட, தோள்கள் இரண்டும் நடுநடுங்கித்

துடிக்க அழுது கொண்டிருப்பதைப் பார்த்தான். ஒரு ஆறு வயதுக் குழந்தை சிணுங்கி அழுவதுபோல இரக்கமும் தணிவும் நிறைந்த குரலில் அவள் அழுதுகொண்டிருந்தாள். அந்த யுவன் தன் பற்களைக் கடித்துக்கொண்டு ஒரு பலமான வாக்குறுதி யளித்தான். அதே சமயம் அந்தப் பெண்ணைப் பார்க்காமல் தலையைத் திருப்பிக் கொண்டான். வெகு நேரம் வரையிலும் அவன் ஆடாது அசையாது உட்கார்ந்திருந்தான்; அவளோ புண்பட்ட நெஞ்சோடு துயரக் குரலில் அழுதுஅழுது கண்ணீரைப் பெருக்கிக் கொண்டிருந்தாள்.

"சரி சரி, போதும்" என்று அவன் அவளைப் பார்க்காமலேயே முடிவாகச் சொன்னான். அவன் சொன்னதை அவள் கேட்கவுமில்லை; கேட்க விரும்பவுமில்லை. பிறகு அவன் அவள் பக்கமாகத் திரும்பி, அவளைத் தன் கரங்களால் பலமாகப் பிடித்தான்; அவளைத் தன் காலடியில் பிடித்துத் தள்ளுவது போன்ற நிலையில் அவளைப் பற்றிப் பிடித்துக்கொண்டு தெளிவற்ற குரலில் ஆக்ரோஷம் நிறைந்த தன்முகத்தை அவள் முகத்துக்கு நேராக வைத்துக் கொண்டு பேசினான்.

"போதும் போதும். என்னை மேலும் அலைக்கழிக்காதே. வா இங்கே. எல்லாம் நம் விதி. வா, பாலஷ்கா! வான்னு? இல்லாவிட்டால் நான் இந்த நிமிஷமே போயிடுவேன். ஆமாம். போயிடுவேன் ஒரேயடியாப் போயிடுதேன்!"

அந்தப் 'பெண்ணோ அவனது அரவணைப்பிலிருந்து விடுபடத் திமிறிக் கொண்டே அழுதுகொண்டிருந்தாள்.

"பெண்களே இப்படித்தான்!" என்று கோபங்கலந்த எரிச்சலோடுசொன்னான் அவன். "நீங்க ஏன் எல்லாத்தையும் படுமோசமான நிலைக்கு ஆளாக்கி, காதல் செய்றீங்க? எல்லாத்தையும் குட்டிச்சுவர்தான் ஆக்கினே; இப்போ உக்காந்து ஒப்பாரி வைக்கிறே. நல்லாயிருப்பே. உன் சிணுங்கலைக் கொஞ்சம் நிறுத்து!"

அவன் அவளை உதறியடித்துவிட்டு எழுந்து நின்றான். அவள் அந்த மணற் பரப்பிலேயே இருந்தாள்.

தன் தலையை முழங்கால்களுக் கிடையில் புதைத்தவாறே இருந்தாள். அவன் அந்தப் பெண்ணின் முகத்தையே வெகுநேரம் பார்த்தான்; ஏக்கம்பிடித்த கண்களால் பார்த்தான்; அவன் முகம் சுருங்கியது. பிறகு அவன் சொன்னான்:

"சரி...நான் வருகிறேன்."

"சரி. போய்வா" என்று லேசாகத் தலையை அவனை நோக்கி உயர்த்திக்கொண்டே முனகினாள் அவள்.

"நாம் கடைசித் தடவையா முத்தமிட்டுக் கொள்வோம்" என்றான் அவன்.

அவள் எழுந்து நின்றாள்; தன்னை அவனது மார்போடு பொருந்த அணைத்துக்கொண்டு அவனது கழுத்தைச் சுற்றித் தன் கரங்களைப் போட்டாள். அவன் அவளது உதடுகளில் அசுர வெறியோடு அழுத்தமாக முத்தமிட்டான். கன்னத்தில் முத்தமிட்டான். பிறகு அவளது கரங்களை விலக்கிக்கொண்டே அவன் பேசினான்:

"நாளை நான் போய்விடுவேன். போய்வரட்டுமா? கடவுள் உனக்கு நல்ல வாழ்க்கையை அருளட்டும். அவங்க உன்னை ஸாஷ்கா நிக்கோனோவுக்குத்தான் கட்டிக் குடுப்பாங்கன்னு நினைக்கிறேன். நல்ல பயல்தான். கொஞ்சம் மந்த புத்தி; ஆளும் நோஞ்சான்; அவ்வளவுதான். அவன் விஷயம் எப்பொழுதுமே அப்படித்தான். சரி, வரட்டுமா?"

அவன் அங்கிருந்து அகன்றான். அவள் தன் முகத்தை, சிவந்து கன்றி வீங்கிப் போயிருந்த தன் முகத்தைத் திருப்பி அவன் போவதைப் பார்த்தாள்; ஏதோ ஒரு அசட்டு நம்பிக்கை பிறந்தது போல, அவள் அவனை மீண்டும் கூப்பிட்டாள்.

"ஸ்டீபன்!"

"என்ன?" என்று திரும்பிக்கொண்டே கேட்டான்.

"போய்வா"

"வருகிறேன்' என்று உரத்த குரலில் சொன்னான் அவன். சிறிது நேரத்தில் அவன் தோப்புக்கு அப்பால் கண் மறைந்து போய்விட்டான்.

அவள் மீண்டும் மணலில் உட்கார்ந்தாள்; மௌனமாகக் கண்ணீர் வடித்து அழுதாள்.

முன்னைப்போலவே மரத்திலிருந்து உதிரும் பழுப் பிலைகள் மிதந்து விழுந்தன; தெள்ளத் தெளிவான ஆற்றுப் பெருக்கு நிர்மலமான வான மண்டலத்தை, ஆற்றங் கரையை, தோப்பின் மரங்களை, அந்தப் பெண்ணை யெல்லாம் கண்ணாடிபோலப் பிரதிபலித்தது.

ஆடுகள் அவள் பக்கம் நெருங்கி வந்து நின்றன. தமது உருண்ட பஞ்சடைந்த கண்களால் அவளை ஏறிட்டு வெறித்து நோக்கின. அவை பார்த்த அந்தப் பார்வையில் ஒரு வியப்புணர்ச்சி பிரதிபலிப்பதுபோல் தோன்றியது. இவ்வளவு பலம் பொருந்திய இந்த இளங்குமரி— தன் கையிலுள்ள கொடி மிளாரினாலேயே அவர்களை அடித்து நொறுக்கக்கூடிய பலம் பொருந்திய இந்தக் குமரி இப்படி அழத்தானா செய்யவேண்டும் என்று அதிசயப்படுவது போல் இருந்தது அந்த ஆடுகளின் வியப்புணர்ச்சி!



# தாலாட்டு

புழுக்கம் நிறைந்த அந்தக் கோடையிரவில், நகருக்கு வெளியே ஒதுக்குப் புறமாயமைந்த அந்தப் பாதையில் ஒரு காட்சியைக் கண்டேன். சேறு நிறைந்த குட்டையொன்றின் நடுவே காலூன்றி நின்றுகொண்டு, சிறு பிள்ளையைப் போல, சகதியை வாரியடித்துக்கொண்டிருந்தாள் ஒரு பெண். காலூன்றி நின்றவாறே, ஆபாசமான பாட்டொன்றை மூங்கைக் குரலில் பாடிக்கொண்டிருந்தாள்.

அன்று ஊருக்குள் சரியான புயல் அடித்து ஓய்ந்திருந்தது; பலத்த மழை கரிசல் பூமிப்பாதை முழுவதையும் சேருக்கிவிட்டது. அந்தக் குட்டை ஆழம் உள்ளது. அந்தப் பெண் முழங்காலளவு ஆழம் வரையிலும் அதில் இறங்கியிருந்தாள். அவளுடைய குரலை வைத்து நிதானித்தால், அவள் குடித்திருக்கிறுள் என்பதை அறியலாம். ஆட்ட பாட்டத்தால் களைப்புற்று அவள் சாய்ந்தால், அந்தச் சேற்று நீரில் அவள் எளிதில் மூழ்கிவிடக் கூடும்.

நான் எனது நெட்டையான பூட்சுகளை இறுக்கிக் கட்டிக்கொண்டு, குட்டைக்குள் இறங்கி அவளது கரங்களைப் பற்றியிழுத்துக் கரைக்குக் கொண்டுவந்தேன். முதலில், அவள் திடுக்கிட்டுப் போனுள். வாய் திறவாது, என்னைப் பின்தொடர்ந்தாள். பிறகு திடீரென்று தனது முழு உடம்பையும் ஒரு உலுப்பு உலுப்பி, தனது கையை விடுவித்துக் கொண்டு, என் மார்பில் அறைந்தாள்; கூச்சலிட்டாள். "உதவிக்கா வாரே!"

மீண்டும் மீண்டும் என்னையும் இழுத்துக் கொண்டு, அந்தக் குட்டைக்கு ஓடினுள்.

"பிசாசுப் பயலே! நான் போகமாட்டேன். என்னை விட்டுவிட்டு நீ போய்விடு. நானும் உன்னை விட்டுப் போகிறேன்...உதவியா...?" அவள் குழறினுள்.

இராக் காவலாளி இருளிலிருந்து தோன்றினான்; எங்களிடமிருந்து ஐந்தடி தூரத்தில் நின்றுகொண்டு கடூர மான குரலில் கேட்டான்:

"யாரங்கே லூட்டி யடிப்பது?"

நான் அவனுக்கு அந்தப் பெண் சேற்றில் மூழ்கப் போனதையும், ஆகவே அவளை நான் வெளியே இழுத்த தையும் தெரிவித்தேன். காவலாளி அந்தக் குடிகார ஸ்திரீயை உற்று நோக்கி, காறித் துப்பிவிட்டுச் சொன்னான்:

"மாஷ்காவா! வா வெளியே."

"மாட்டேன்!"

"நான் சொல்லுகிறேன்—வா வெளியே!"

"நான் வரவே மாட்டேன்."

"சீ சிறுக்கி! உன்னை உதைப்பேன்" என்று காவ லாளி அவளைப் பார்த்துச் சொல்லிவிட்டு, என்னிடம் திரும்பிச் சொன்னான். "அவள் இங்கே பக்கத்திலேதான் வசிக்கிறாள். அவுரிக் கட்டைகள் பொறுக்கி, ஜீவனம் செய்கிறாள். பேர் மாஷ்கா...ம்...சிகரெட் இருக்கிறதா?"

நாங்கள் சிகரெட்டுகள் பற்றவைத்தோம். அவள் அந்தச் சேற்றுக்குள் இறங்கிக் கொண்டே அடிக்கடி சத்த மிட்டாள்.

"அதிகாரமா செய்கிறீர்கள்! எனக்கு நான்தான் அதி காரி. வேண்டுமென்றால், இதிலே நான் குளிக்கக்கூடச் செய்வேன்; அது என் இஷ்டம்."

"வா. உன்னைக் குளிப்பாட்டுகிறேன்" என்று அந்தத் தாடி வளர்த்த தடிக் காவலாளி சொன்னான். "இரவெல் லாம் இப்படித்தான். வீட்டிலே இவளுக்கு ஒரு நொண்டிப் பிள்ளையும் இருக்கிறான்."

"இங்கிருந்து அவள் தொலைவிலா வசிக்கிறாள்?" எனக்குப் பதில் கூறுமலே அவன் சொன்னான்: "அவளைச் சுட்டுத்தள்ள வேண்டும்."

"அவளை வீட்டுக்குக் கொண்டு போகவேண்டும்" என்றேன் நான். அந்தக் காவலாளி சிரிப்பது தாடிக்குள்

தெரிந்தது; சிகரெட்டை எனது முகத்துக்கு நேராய் ஏந்திப் பிடித்தவாறே அந்தச் சகதிப் பாதையில் நடந்தான்..

"கூட்டிக்கொண்டு போ. ஆனல் அவள் மீது படிந்திருக்கும் சகதியைக் கவனி."

அதற்குள் அந்தப் பெண் சேற்றுக் குட்டையில் அமர்ந்து கொண்டு, சகதியை வாரியிறைத்துக் கொண்டு, மூங்கைக் குரலில் பயங்கரமாய்க் கத்தினள்.

"அந்த—ஆழமான— கடலிலே!"

கொழு கொழு வென்றிருக்கும் அந்தச் சேற்று நீரில், பரந்த வானக் கருமையின் ஓரத்திலே நின்று மினுங்கும் பெரிய தாரகை ஒன்று பிரதிபலித்தது. அந்த நீரில் ஒரு சிற்றலை வீசினதால், பிரதிபிம்பம் மறைந்தொழிந்தது. மீண்டும் நான் அந்தக் குட்டையில் இறங்கி, அவளுடைய கட்கத்தில் கைகொடுத்துத் தூக்கி, என் முழங்காலால் அவளைத் தாங்கி, வேலிப் புறமாகக் கூட்டி வந்தேன். அவளோ கைகளை ஆட்டிக்கொண்டு, இடக்குப் பண்ணிக் கத்தினள்.

"அடிக்கத்தானே செய்வே! அடி. நல்லா அடி. பரவாயில்லெ. சீ, மிருகமே! கொலைகாரா! போரியா! இல்லியா! அடிக்கவா செய்தே!"

அவளை வேலியின்மீது சாத்தி வைத்து அவளது இருப்பிடத்தைக் கேட்டேன். அவள் தனது வெறியேறிய தலையை உயர்த்தி, கரும்புள்ளி போன்ற கண்களால் கூர்ந்து பார்த்தாள். அவளுடைய மூக்கு உள் வாங்கிப் போயிருப்பதைக் கண்டேன். வெளியே நீட்டிக்கொண்டிருந்த பாகம், ஏதோ பித்தானைப் போலத் தானிருந்தது. அவளுடைய மேலுதடு கோரைப் பட்டுக் கோணி ஒதுங்கியிருந்தது; சிறுபற்கள் வெளியே தெரிந்தன; அந்த வதங்கிய முகத்தில் வெறுக்கத்தக்க புன்னகை நெளிந்தது.

"சரி, நாம் போகலாம்" என்ருள் அவள்.

நாங்கள் இருவரும் அந்த வேலிப் புறமாகவே சென்ரேம்; அவளுடைய சட்டையில் படிந்திருந்த சேறெல்லாம் என்னுடைய கால்களில் தெறித்து விழுந்தது.

"வா— என் அன்பே!" அவள் அமைதியோடு முனகினாள்.

"உள்ளே, கூட்டிச் சென்று உனக்கு வசதி பண்ணுகிறேன்."

அவள் என்னை ஒரு பெரிய இரட்டை மாடிவீட்டு முற்றத்துக்குக் கொண்டு சேர்த்தாள். குருடனைப் போல ஜாக்கிரதையுடன் அவள் அங்கு கிடந்த பெட்டிகள், விறகுக் குவியல்கள், வாளிகள், வண்டிகள் முதலியவைகளைக் கடந்து சென்று சுவற்றை யொட்டிய ஒரு பொந்தருகே நின்று என்னை அழைத்தாள்.

"உள்ளே வாருங்கள்"

அந்தப் பலமற்ற சுவரைப் பிடித்துக் கொண்டு, அந்தப் பெண்ணுடைய இடுப்பையும் சுற்றி வளைத்துப் பிடித்துக் கொண்டு அவளுடைய நிலைகொள்ளாத உடம்பை இழுத்தவாறே சென்றேன்; வழுக்கும் படிகள் வழியாக இறங்கினேன்; கதவை நெருங்கியதும் நாதாங்கியைத் தடவிப் பார்த்துத் திறந்தேன்; திறந்தவுடன் ஒரு கறுப்புக் குழிக்குள் செல்லும் வாசல் நடையில் நான் நிற்பதை உணர்ந்தேன். அதற்குமேல் செல்ல எனக்குத் தைரியம் இல்லை.

"அம்மா! நீ தானா அம்மா?" இருளிலிருந்து ஒரு மெல்லிய குரல் கேட்டது.

"நான் தாண்டா!"

அழுகல் நாற்றமும், கிலெண்ணெய் வாடையும் என் மூக்கைப் பிடித்தன. ஒரு தீக்குச்சி கிழிக்கப்பட்டது; அந்த வெளிச்சத்தில் ஒரு வெளிறிய குழந்தையின் முகம் தோன்றி மறைந்தது.

"வேறு யாருடா உன்னைத்தேடி வருவார்கள்? நானே தான்" என்று சொல்லிக் கொண்டே என்மீது சாய்ந்தாள்.

இன்னொரு தீக்குச்சி கிழிக்கப்பட்டது; ஏதோ கண்ணாடி கணீரென்றது; முதுமை தட்டிய மெலிந்த கரமொன்று சிறு தகர விளக்கை ஏற்றியது.

"என் கண்ணே!" என்று கூறியவாறே, அவள் சுவர் மூலையில் தடுமாறிச் சாய்ந்தாள்; அங்கு தரையை ஒட்டி ஞற் போல் ஒரு பெரிய படுக்கை கிடந்தது.

விளக்கின் சுடரைக் கூர்ந்து கவனித்தவாறே, அந்தப் பிள்ளை புகை உமிழும் திரியைச் சரியாக்கினுன். அவனுடைய முகம் வக்கிர அமைதி கொண்டது; மூக்கு கூரியது; உதடுகள் பெண்களுடையதைப்போல் தடித்திருந்தன. மெல்லிய பிரஷ்ஷைக் கொண்டு வரைந்த சித்திரம் போலிருந்தது அந்த முகம்; இருளும் ஈரமும் நிறைந்த அந்தப் பொந்தில் அப்படிப்பட்ட முகத்தைப் பார்ப்பதே அதிசயந்தான். விளக்கைச் சீர்படுத்திய பின்பு, சுருங்கி வதங்கிப் போன கண்களை என்மீது திருப்பிக் கேட்டான்:

"குடிச்சூட்டு வந்திருக்காளா?"

படுக்கையிலே கிடந்த அவனுடைய தாய் குறட்டை விட்டாள்; கொர் கொர் என்ற தொறட்டிழுப்பும் வந்து கொண்டிருந்தது.

"அவளுடைய ஆடைகளைக் கழற்றவேண்டும்" என்றேன் நான். "கழற்றேன்" என்று பதில் கூறிவிட்டு, பையன் கண்களைத் தாழ்த்தினுன். அவளது நனைந்த அங்கியை நான் கழற்ற ஆரம்பித்தபோது, அந்தப் பையன் அமைதியாகவும் வியாபாரார்த்தமாகவும் கேட்டான்.

"விளக்கு?—அதை அணைச்சுரட்டுமா?"

"எதற்காக?"

அவன் பதில் கூறவில்லை. நான் அவளை ஒரு மாவு மூட்டையைப் போல் கையாளும்போது அவனைப் பார்த்தேன். அவன் தரையில் கிடந்த கனத்த பலகைப்பெட்டியின் மேல் உட்கார்ந்திருந்தான்; பெட்டியின் மேல் "ஜாக்கிரதையுடன் கையாளவும். என். ஆர். அண் கோ" என்ற எழுத்துக்கள் காணப்பட்டன. அந்தப் பையனுடைய தோள் அந்தச் சதுர ஜன்னல் பலகையில் சாய்ந்து பதிந்திருந்தது. சுவரை யொட்டி சில அரங்குகள்; அவைகளில் சிகரெட்டுப் பெட்டிகளும் தீப் பெட்டிகளும் அடுக்கி வைக்கப்பட்டிருந்தன. பையன் உட்கார்ந்திருந்த பெட்டியை

அடுத்து, மஞ்சள் காகிதம் ஒட்டப் பெற்று மேசை மாதிரி விளங்கும் இன்னொரு பெட்டியும் கிடந்தது. தனது தோய் வுற்ற கரங்களைப் பிடரியில் கோத்தவாறு, இருளடைந்த ஜன்னல் கதவுகளைப் பார்த்துக் கொண்டிருந்தான் அவன்.

அவளுடைய ஆடை முழுவதையும் களைந்தவுடன், ஈர உடைகளைக் கணப்பு வெக்கையில் போட்டேன். மூலை யிலிருந்த மண் பாண்டத்தில் என் கரங்களைச் சுத்தி செய்து, கைக்குட்டையால் துடைத்துவிட்டு, அந்தப் பையனை நோக்கிச் சொன்னேன்.

"சரி. அப்போ—நான் வருகிறேன்"

அவன் என்னைப் பார்த்தான்; வாய்க்குள் ஏதோ முனகிவிட்டு, என்னைப் பார்த்துக் கேட்டான் :

"இப்போ—நான் விளக்கை அணைச்சுரட்டுமா?"

"உன் இஷ்டம்."

"அப்போ—நீ வெளியேவா போறே? நீ படுக்கப் போகலியா?" தன்னுடைய சிறு கரத்தினால் தன் தாயைச் சுட்டிக் காட்டி, "அவளோடே!" என்றான்.

"எதற்காக?" என்று திடுக்கிட்டுப் போய்க் கேட் டேன்.

"அது உனக்கேதான் தெரியுமே" என்று அமைதி யுடன் கூறிவிட்டு, கீழே சாய்ந்துகொண்டே சொன்னான் :

"அவங்களெல்லாம் அப்படிச் செய்வாங்க."

நான் என்னைச் சுற்றியுள்ளவைகளைப் பார்த்தேன். வலது புறம் லக்ஷணமற்ற கணப்படுப்பின் அகண்ட வாய்; கணப்பின் மேலே அசுத்தமான பாத்திரங்கள்; மூலையில் பெட்டிக்குப் பின்னால், கீலெண்ணெய் படிந்த கயிறு; அவு ரிக் கட்டு; விறகு முண்டுகள்; தீயிடுக்கி; தண்ணீர் வாளி கள் சுமந்து வருவதற்கமைந்த நுகத்தடி. என் காலடியில் அந்த மஞ்சள் உருவம் குறட்டைவிட்டுக் கொண் டிருந்தது.

" நான் ஒன்னோடே கொஞ்ச நேரம் இருக்கலாமா ?" என்று கேட்டான் பையன். தலையைத் தாழ்த்திப் புருவங்களுக்குக் கீழாக என்னைப் பார்த்தான்: "விடியற வரையில் அவ எந்திருக்கமாட்டாள் " என்றான்.

" ஆனால்—அவள் எனக்குத் தேவையில்லை " என்றேன் நான்.

அவனுடைய பெட்டியருகே குந்தி யமர்ந்துகொண்டே அவனது தாயை நான் எப்படிச் சந்தித்தேன் என்ற விஷயத்தை ஹாஸ்யத்துடன் சொல்ல முயன்றேன்: " அவள் சகதியிலே உட்கார்ந்து, கைகளால் அளைந்து கொண்டும் பாடிக்கொண்டும் இருந்தாள்..."

அவன் தனது நெஞ்சுக் கூட்டைச் சொரிந்தவாறே, வதங்கிய புன்னகையுடன் தலையாட்டினான்.

" குடித்திருந்தாள்—அதனால் தான் அப்படி; சுவாதீனமாய் இருந்தால்கூட அப்படித்தான் செய்வாள். ஒரு குழந்தையைப் போல..."

இப்போது நான் அவனுடைய கண்களை நன்றாகப் பார்க்க முடிந்தது. அவனுடைய கண் 'ரெப்பை'கள் நீண்டிருந்தன. கண்ணிமைகளும் அழகாகச் சுருண்ட மயிரிழைகளால் நிறைந்திருந்தன. கண்களுக்குக் கீழே பாரித்திருந்த நீலநிறம் ரத்த மிழந்த தோலின் வெளுப்பைக் கூட்டிக் காட்டியது; சுருக்கம் விழுந்த அகன்ற நெற்றியில், செம்பட்டை மயிர்ச் சுருள் கவிந்து கிடந்தது. ஆர்வமும் அமைதியும் நிறைந்த அந்தக் கண்களின் உணர்ச்சிகள் சொல்லுக் கடங்காதவை; இந்த அமானுஷ்யமான அதிசயப் பார்வையைத் தாங்குவதே கஷ்டமாகத்தானிருந்தது.

" உன் கால்களுக்கு என்ன கேடு விளைந்தது ?"

துணிச் சுருள்களுக்கிடையிலிருந்து அந்தச் சூம்பிய காலை வெளியே எடுத்தான்; முட்டைக் கோஸ் தண்டைப் போலிருந்த அந்தக் காலைத் தனது கையினால் தூக்கி, பெட்டியோரத்தில் வைத்தான்.

"இரண்டு கால்களும் இப்படித்தான் இருக்கு. பிறந்ததிலேருந்து அப்படித்தான். அதிலே நடக்க வலுவும் கிடையாது; சீவனும் கிடையாது. அப்படியே இருந்தது இருந்தாற் போலத்தான்."

"சரி. அந்தப் பெட்டிகளில் என்ன இருக்கின்றன?"

"காட்சிசாலை!" என்று பதில் கூறிவிட்டு, தனது காலை ஒரு கம்பை எடுப்பதுபோல் எடுத்து, மீண்டும் பழந் துணிகளால் சுற்றிச் சுருட்டி வைத்துவிட்டு, புன்னகை புரிந்தான்.

"அதை யெல்லாம் ஒனக்குக் காட்டட்டுமா? சரியா உட்காரு. இந்த மாதிரி நீ வேறே எங்கேயும் பார்த்திருக்க மாட்டே!" குதூகலத்துடன் தனது நீண்ட கைகளை நீட்டி, அரங்கிலிருந்த ஒவ்வொரு பெட்டியையும் எடுத்தெடுத்து என்னிடம் கொடுத்தான்.

"ஜாக்ரதை! திறக்காதே. திறந்தா அதுகள் ஓடிப் போயிரும். மெதுவாக் காதை வெச்சுக் கேளு. தெரியுதா?"

"ஆமாம், ஏதோ அசைகிறது."

"அஹ்ஹா. அதுக்குள்ளே ஒரு சிலந்தியாக்கும் இருக்கு...பொல்லாதது! அது பேரு டிரமர்; கெட்டிக் காரப் பய!"

அந்தப் பையனின் கண்களில் உயிரும் உணர்வும் கூடிற்று; ஒளியற்ற முகத்தில் புன்னகை சுழித்தோடியது. விறுவிறென்று அரங்கிலிருந்து ஒவ்வொரு பெட்டியாக எடுத்து, தனது காதருகே வைத்துப் பார்த்துவிட்டு என்னிடமும் கொடுத்தான். கொடுக்கும்போதே பேசினான்:

"இதோ இதுக்குள்ளே அனிசிம் என்கிற பாச்சைப் பூச்சி இருக்கு—இது ஒரு சிப்பாய் மாதிரி. இதிலே ஈ இருக்கு. இது இன்ஸ்பெக்டரோடே பெஞ்சாதி. மோசமானது!...படுமோசமானது!...நாள் முச்சூடும் இரைஞ்சுக்கிட்டே இருக்கும். எல்லாத்தையும் திட்டும்; அம்மா

வோடே தலே மயிரைக் கூட ஒரு நாள் புடிச்சி இழுத்திட்டுது. அது ஈ இல்லே...ஆனு இன்ஸ்பெக்டரோடே பொஞ்சாதி. அதன் வீட்டிலே தெருவெப் பாக்க சன்னலெல்லாம் உண்டு. பாக்கிறதுக்குத்தான் ஈ மாதிரி. இது வந்து...இது கரும்பாச்சை; பெரிசு; தலேவன். ரொம்ப ஒழுங்குள்ளது. ஆனல், குடிகார மட்டை; மான ஈனங் கிடையாது. முற்றத்திலே போய் நிர்வாணமாத் திரியும்; சடை நாய் மாதிரி 'கறும்கம்'னு இருக்கும். இது ஒரு மூட்டைப்பூச்சி; பேரு நிக்கோடிம் மாமா. முற்றத்திலே தான் பிடிச்சேன். இது ஒரு பரதேசிச் சாமி; தன்னே எல்லாரையும் அப்படி மதிக்கவச்சி, கோயிலுக்குப் பணந் திரட்டுது. அம்மா இதை 'ஏமாளி'ன்னு கூப்பிடுவா. அது அவளுடைய காதலன். அம்மாவுக்கு எத்தனேயோ காதலர்கள், ஈக் கூட்டம்போல நீ அவ்வளவையும் எண்ணிட முடியாது. அம்மாவுக்கு மூக்கு இல்லாட்டியுங்கூட, அத்தினி பேர்!"

"அவள் உன்னே அடிக்கமாட்டாளா?"

"அவளா? உனக்கென்ன பைத்தியமா? நான் இல்லாமெ அவளாலெ வாழ முடியாது. அவ மனசு ரொம்ப நல்ல மனசு; ஆனு, குடிக்கமட்டும் செய்யிரு. அன்பும் அருமையும் உள்ளவள்தான்; ஆனு, சிறுக்கி!—குடிக்க மட்டும் செய்யிரு. அவள்ட்டே நான் சொல்றேன்: 'முட்டாள்! ஓட்காவைக் குடிக்கிறதை மட்டும் விட்டிரு; நீ பணக்காரி ஆயிருவே.' அப்படின்னு அவள் வெறுமனே என்னேப் பாத்துச் சிரிக்கிருள். பொம்பிள்ளே—இப்பிடி முட்டாத்தனமா யிருக்கா. ஆனு, நல்ல மனுஷிதான். தூங்கியே பொழுதைக் கழிச்சுருவா; நீதான் பாரேன்." அவனுடைய கவர்ச்சி நிறைந்த அந்தப் புன்னகையை நீங்கள் கண்டால் உடனே அவன் மீது அனுதாபம் பிறக்கும்; அவனுக்காக அனுதாபத்துடன் வாய் திறந்து ஓலமிட்டு, ஊர் முழுதும் ஒலிக்கும்படி செய்துவிடுவீர்கள். அவனுடைய அழகமைந்த தலே ஒல்லியான கழுத்தின் மேல், ஒரு அபூர்வ மலர்போல ஆடியது; தாங்கமுடியாத சக்தியோடு, அவனுடைய கண்கள் உயிர் பெற்று ஒளி வீசின.

அவனுடைய குழந்தைப் பேச்சில், பொல்லாத வாய ளப்பில் மயங்கிக் கேட்டுக் கொண்டிருக்கும்போது சூழ் நிலையையே மறந்துவிட்டேன். மறு கணம் நான் அந்தச் சிறை வீட்டின் ஜன்னல், வெளிப்புறம் சகதி வாரியடிக்கப் பட்ட சுவர், கணப்பு அடுப்பின் கறுத்தவாய், மூலையிலே கிடந்த அவுரிக்கட்டு, வாசலை ஒட்டிக் கந்தைத் துணியில் வெண்ணெயைப் போல் உருண்டு கிடக்கும் அவனுடைய தாய்—எல்லாவற்றையும் பார்த்தேன்.

"நல்ல காட்சி சாலை தானு?" என்று பையன் பெருமை யுடன் கேட்டான்.

"ரொம்ப நல்லதுதான்"

"ஆமு, எங்கிட்ட வண்ணுத்திப் பூச்சிகளோ, அதன் வர்க்கமோ கிடையாது"

"உன் பெயரென்ன?"

"லெங்க்கா"

"அடெ, என் பேரே தான்"

"நிசம்மாவா? நீ எந்த மாதிரி மனுஷன்?"

"ஒரு மாதிரியுமில்லை"

"நீ பொய் சொல்றே, ஒவ்வொருத்தரும் ஒவ்வொரு மாதிரிதான். எனக்குத் தெரியும். நீ ரொம்ப நல்லவன்"

"இருக்கலாம்"

"எனக்குத் தெரியுமே— ஆனு நீ ஒரு பயந்தாங் கொள்ளி"

"ஏன் அப்படிச் சொல்கிருய்?"

"எனக்குத் தெரியும்" அவன் சிரித்துக் கொண்டே என்னைப் பார்த்துக் கண்ணைச் சிமிட்டினுன்.

"ஏன் அப்படி நினைக்கிருய்?"

"சரி, என்னோடெ உட்காரு. நீ ராத்திரித் தனியா வீட்டுக்குப் போகப் பயப்படுறே?"

"ஆமு, அதோ பொழுது விடிந்து விட்டதே"

"அப்பன்ஞ, நீ போகப் போரியா?"

"திரும்பியும் வருவேன்"

அவனுல் என்னை நம்ப முடியவில்லே. தனது அமைதி நிலவும் கண்களே மூடி அவன் சொன்னுன்:

"எதுக்காக?"

"ஏன்? உன்னைப் பார்க்கத்தான். நீ ஒரு ரசமான பேர் வழி, சரி. நான் வரட்டுமா?"

"நிச்சயமா?—எல்லாருந்தான் இங்கே வருவாங்க" பெரு மூச்சு விட்டுவிட்டு மீண்டும் சொன்னுன்: "நீ என்னை ஏமாத்தறே"

"சத்தியமாச் சொல்கிறேன். வருவேன்"

"கட்டாயம் வா. என்னைப் பார்க்க வா. அம்மாவைப் பாக்கிறதுக்கில்ல, அவ எப்படியும் போகட்டும்!—நீயும் நானும் சிநேகிதமா இருப்பமா...ம்...?"

"ரொம்ப சரி"

"சரி. நீ பெரியவஞ இருந்தா, பரவாயில்லே. உனக்கு வயசு என்னுச்சு?"

"இருபது"

"எனக்குப் பதினெண்ணு. எனக்குச் சிநேகிதர்களே கிடையாது. கட்கா மாத்திரம், அவள் அந்தத் தண்ணீர் வண்டிக்காரனின் மகள், என்னேடே சேர்ந்தா அவ ளோடே அம்மா அவளே அடிக்கிரு...ம்...நீ திருடஞ?"

"இல்லே. ஏன் திருடன் என்கிருய்?"

"ஒன் வாய்—பயங்கரமா யிருக்கு. வெறுந் தோல் மயம்!...ஒன் மூக்குத் திருடனேப்போலவே இருக்கு. இங்கே இரண்டு திருடர்கள் வருவாங்க. ஒண்ணு, ஸாஷ்கா; முட்டாள்; அசிங்கமானவன். இன்ஞெண்ணு, வானிச்கா; நல்லவன்; நாய்மாதிரி நல்லவன்...ஒங்கிட்டே சின்னப் பெட்டிகள் இருக்கா"

"வரும்போது கொண்டு வருகிறேன்"

"கொண்டு வா. நீ வாரதாக அம்மாவிடம் சொல்ல மாட்டேன்"

"ஏன்?"

"மாட்டேன். மனுஷாள் வந்தா அவளுக்கு எப்போதும் சந்தோஷம். நாய்!...மனுஷர்களை யெல்லாம் அவள் காதலிக்கிருள். சகிக்கலெ! ஆனு, அம்மா ரொம்ப நல்லவள். பதினஞ்சு வயசுலெ என்னைப் பெற்ருள்; என்னை எப்படி 'உண்டாளுள்' எங்கிறதே அவளுக்குத் தெரியாதாம்......நீ எப்ப வருவே?"

"நாளை மாலையில்"

"மாலையிலா? அப்போ அவள் குடிச்சிட்டிருப்பாள்... ம்...நீ திருடன் இல்லெென்ரு என்ன தொழில் பாக்கிறே?"

"பவேரியன் பீர் விற்கிறேன்"

"அப்படியா? எனக்கு ஒரு பாட்டில் கொண்டு வாயேன். வருவியா?"

"நிச்சயமாய் ஒன்று கொண்டு வருகிறேன். சரி, நான் வரட்டுமா?"

"ஓடு ஓடு. வருவியா நீ!"

"அநேகமாய்!"

அவன் தனது நெடிய கரங்களை என்னிடம் நீட்டினுன். நான் அந்த மெல்லிய குளிர்ந்த கரங்களைப் பிடித்து அழுத்திக் குலுக்கிவிட்டு, திரும்பிப் பார்க்காமல் குடிகாரனைப் போல் முற்றத்துக்குத் தாவி வந்தேன்.

பொழுது விடிந்துகொண்டிருந்தது. அரைகுறையாய்ப் பாழடைந்துள்ள கட்டிட வரிசைக்கு மேலாக, சுக்கிர வெள்ளி சிலிர்த்து நடுநடுங்கி மறைந்துகொண்டிருந்தது. அந்த வீட்டுச் சுவருக்கடியிலுள்ள அசுத்தமான குழியிலிருந்து, பாதாள அறையின் ஜன்னல் கதவுகள் குடிகாரன் கண்களைப்போல் இருண்ட தூசி படிந்த சதுரக் கண்களால் என்னை விறைத்து நோக்கின. வாயில் பக்கம்

நின்ற வண்டியில் ஒரு சிவத்த விவசாயி தனது பெரிய கால்களை அகல விரித்துப் போட்டுத் தூங்கிக்கொண்டிருந் தான். அவனுடைய அடர்ந்த தாடி வானை நோக்கி நிமிர்ந்து நின்றது; அதனிடையில் வெண் பற்கள் மின் வெட்டின. அந்த விவசாயி கண்களை மூடிக்கொண்டு, வெறுப்போடு சிரிப்பது போலிருந்தது அந்தக் காட்சி. காயம் பட்டதனால் மயிரிழந்து முதுகிலே வழுக்கை பெற்ற கிழட்டு நாயொன்று எனது காலடியில் மோப்பம் பிடித் துச் சிணுங்கியது; பசியோடு மெதுவாக ஊளையிட்டது. எனது இதயத்தில் அதற்கு அனுதாபம் பிறந்தது. உஷத் காலத்தில் வெளிறிய பழுப்பொளி சேற்றுக் குட் டங்களில் பிரதிபலித்தது; அந்த அசுத்தமான குட்டை களிலே கண்ட பிரதிபலிப்பு இதய நிறைவைக் கெடுத்து, வேண்டாத அழகை வீணாக்கிக் கொண்டிருந்தது.

மறு நாள் நான் எங்கள் வட்டாரத்துப் பையன்களைச் சில மூட்டைப் பூச்சிகளும் வண்ணாத்திப் பூச்சிகளும் பிடித் துத் தரும்படி வேண்டிக்கொண்டேன். மருந்துக் கடையி லிருந்து சிறு சிறு பெட்டிகள் வாங்கிக்கொண்டேன். பிறகு இரண்டு பாட்டில் க்வாஸ் பீர், சில இஞ்சி ரொட்டி கள், சர்க்கரை மிட்டாய்கள் முதலியவைகளோடு லெங்க் காவைப் பார்க்கச் சென்றேன். அகல மலர்ந்த கண்க ளோடும், வியப்போடும் லெங்க்கா எனது பரிசுகளை ஏற் றுக்கொண்டான். அந்தக் கண்கள் பகலொளியில் மேலும் வியப்பூட்டின.

"ஓ-ஹோ—ஹோ" என்று அவன் தணிந்த, குழந் தைத் தனம் அற்ற குரலில் கத்தினான்.

"எல்லாத்தையும் கொண்டு வந்தூட்டியே! நீ பணக் காரனா? அது எப்படி—பணக்காரன்னா...ஆனா, நீ ரொம்ப மோசமாய் உடை உடுத்தியிருக்கே! திருடன் இல்லேன் னும் சொல்றே!...இந்தச் சின்னப் பெட்டிகள்! ஓ-ஹோ ஹோ...என் கையெல்லாம் சுத்தமாயில்லே. அதைத் தொடவே கூசுது. உள்ளே என்ன இருக்கு? ஆஹா, ஒரு மூட்டை! களிம்பேறிய செம்பு மாதிரியில்லெ இருக்கு! சீ மூதி!...இவை யெல்லாம் திறந்தாப் பறந்தோடிப் போயி

ருமா?...நல்லாயிருக்கணும்!" மேலும் அவன் உற்சாகத்துடன் திடீரெனச் சத்தமிட்டான்.

"அம்மா! கீழே வந்து, என் கையை யெல்லாம் கழுவி விடும்மா. அசடே, இங்கே வந்து இவன் என்ன கொண்டாந்திருக்கான்னு பாரேன். அவன்தான்—நேத்து ராத்திரி உன்னை இழுத்துக்கிட்டு வந்தானே அவனேதான். போலீஸ்காரன் மாதிரி இருந்தானே, அவன் பேரும் லெங்க்காதானும்."

"நீ அவருக்கு நன்றி கூறவேண்டும்" என்ற தணிந்த குரல் என் பின்னே கேட்டது.

பையன் அதி விரைவாகத் தலையை ஆட்டினான்.

"வந்தனம்! வந்தனம்!"

அந்தப் பொந்துக் குடிலுக்குள் தூசும் தும்பும் மேகம் போல் கனத்து மிதந்தன. ஆகவே, அவற்றின் ஊடே, கலைந்த தலையும் அங்கஹீனமான முகமும், பல் வரிசையின் ஒளி ரேகையும், வேண்டா வெறுப்பாக வளையும் புன்னகையும் கொண்ட அந்தப் பெண்ணின் மங்கிய உருவை அடுப்பருகே கண்டேன்.

"சௌக்கியமா?"

"சௌக்கியமா ?" என்று திருப்பிக் கேட்டாள் அவள். அவளுடைய மூங்கைக் குரல் குழம்பியிருந்தாலும் களிப்பும் பெருமிதமும் கொண்டிருந்தது. அவள் ஓரக்கண்ணால் என்னைப் பார்த்து, கேலி செய்வது போலிருந்தது.

லெங்க்கா என்னை மறந்துவிட்டு, இஞ்சி ரொட்டியைச் சுவைத்துத் தின்றான். பெட்டிகளைப் பதமாய்த் திறக்கும் போது வாய்க்குள் முனகிக்கொண்டான். அவனுடைய கண்ரெப்பைகள் அவன் கன்னங்களில் நிழலாடி, கண்களுக்குக் கீழ் உள்ள வளைவுகளைத் துலாம்பரமாகக் காட்டின. கிழட்டு மனிதனின் மங்கிய முகம் போன்ற சூரியன் புழுதியடைந்த ஜன்னல் வழியாக எட்டிப் பார்த்தான்; மங்கிய ஒளி பையனின் செம்பட்டைத் தலைமயிர் மீது விழுந்தது. பொத்தான் கழற்றப்பட்ட உடம்பில், அவனுடைய ஹிருதயம் மெல்லிய குருத்தெலும்புகளுக்குப்

பின்னுல் துடிப்பதையும், மார்புக்கண் மேலும் கீழும் அடிப்பதையும் கண்டேன்.

அவனுடைய தாய் அடுப்புப் பக்கமிருந்து இறங்கி, கழுவு பாத்திரத்தில் ஒரு துண்டை நனைத்தெடுத்துக் கொண்டு, லெங்க்காவிடம் வந்து அவனுடைய இடது கரத்தைப் பிடித்தாள்.

"அவன் ஓடிப் போயிட்டான். நிறுத்து அவனை; ஓடிட்டான்!" என்று கத்தினுன். தனது முழு உடம்பையும் அந்தப் பெட்டியில் தாழ்த்தி, நாற்றமடிக்கும் துணிகளைக் கொண்டு மூடிப் பிடித்தான். அவனுடைய நொண்டிக் கால்கள் வெளியே தெரிந்தன. அந்தப் பெண்ணும் சிரித்தாள்; அந்தக் கந்தைகளை அணைத்துக்கொண்டே சத்தமிட்டாள்.

"பிடி அதை!"

அந்த மூட்டையைப் பிடித்து அவள் அவன் உள்ளங் கையில் விட்டாள்; விட்டுத் தனது சோளக் கொத்து நிறக் கண்களுடன் அதைப் பார்த்தாள். பிறகு என்னைப் பார்த்துப் பழகிய குரலில் சொன்னுள் :

"இதுமாதிரி நிறைய இருக்கிறது"

"அதை நசுக்கிப் பிடாதே" என்று அவள் பிள்ளை எச்சரித்தான்.

"ஒரு தடவை அவள் குடிச்சிட்டு வந்து, என் மிருகக் காட்சிசாலை மேல் உட்கார்ந்து, எத்தனையையோ கொன்னு தள்ளிட்டா"

"அதை மறந்துவிடடா கண்ணு !"

"நானு அவைகளை யெல்லாம் புதைக்க வேண்டியதாகப் போச்சு"

"ஆனல், பிறகு நான் உனக்கு நிறையப் பிடித்துக் கொடுத்தேனே"

"நீ பிடிச்சதா? நீ நசுக்கிக் கொன்னதெல்லாம் பழகிப் போனதாக்கும், அசடே! செத்ததை யெல்லாம் நான் அடுப்பண்டை புதைச்சேன். ஊர்ந்து போய்த்தான்

புதைச்சேன். அங்கே ஒரு இடுகாடு இருக்கு...உனக்குத் தெரியுமா, எங்கிட்ட ஒரு சிலந்திப் பூச்சி இருந்தது. 'மிங்க் கா'ன்னு பேரு அம்மாவோடெ வைப்பாளன் மாதிரி— அவன்தான் ஜெயில்லே கிடக்கானே, தடியன்! அவனை மாதிரி இருக்கும்—''

"என் அருமைக் கண்ணு!'' என்று கூறிக்கொண்டே, முரமுரத்த கறுத்த கை விரல்களால் தன் மகனின் தலை மயிர்ச் சுருள்களைக் கோதினள்; பிறகு முழங் கையால் என்னை இடித்துக் கொண்டு, களி துலங்கும் கண்களோடு கேட்டாள்:

"என் மகன் அழகாயிருக்கிருன்—இல்லையா? அவன் கண்களைப் பாருங்களேன்''

கையிலிருந்த மூட்டைப் பூச்சியைப் பதம் பார்த்துக் கொண்டிருந்த லெங்க்கா, "என் கண்ணிலே ஒண்ணை வேணுமின்னு எடுத்துக்கோ—எனக்குக் கால் மட்டும் கொடு'' என்று சிரித்துக்கொண்டே சொன்னுன். மேலும், "அம்மா...இதைப் பாரம்மா. கல்லு மாதிரி, எவ்வளவு தண்டியா யிருக்கு! அம்மா—நீ ஏணி செய்து குடுத்தியே, அந்தப் பாதிரியாரை ஞாபகமிருக்கா—அவரு மாதிரி''

"ஞாபகம் இருக்கிறது''

சிரித்துக்கொண்டே அவள் என்னிடம் சொன்னுள்:

"இதோ பாருங்கள். ஒரு தடவை இங்கே, ஒரு தடி மனுஷன், ஒரு பாதிரி வந்தார். வந்து, 'இங்கே பார். நீ ஒரு அவுரி பொறுக்கிறவள் தானே. அப்படியானுல், எனக்கொரு நூலேணி செய்து தாயேன்' என்று கேட்டார். நானே அந்த மாதிரி ஏணிகளைப் பற்றிக் கேள்விப் பட்டது கூட இல்லை. என்னுல் முடியாது என்றேன். 'நான் சொல்லித் தருகிறேன்' என்று அவர் சொல்லி விட்டு, தமது நிலையங்கியைக் கழற்றி, தமது தொந்தியைச் சுற்றியிருந்த நீளக் கயிற்றை உலைத் தெடுத்தார். பிறகு சொல்லிக் கொடுத்தார். நான் அதைத் திரித்துத் திரித்துச் செய்யும்போதே 'இவருக்கு இது எதற்கு? ஒரு

வேளை எங்கேயாவது ஒரு தேவாலயத்தைக் கொள்ளை யிடப் போகிறாரா?' என்று நினைத்தேன்."

அவள் தன் மகனின் புஜங்களை அணைத்துத் தட்டிக் கொடுத்துக் கொண்டே வாய் விட்டுச் சிரித்தாள்.

"ஓ! எவ்வளவு திருட்டுத்தனம் உள்ளவர்கள், இவர் கள்? சொன்ன வேளையில் அவர் வந்தார். அவரிடம் நான் 'இதை வைத்துக் கொண்டு நீர் திருடினால், எனக் கும் அதற்கும் யாதொரு சம்பந்தமும் இருக்கக்கூடாது' என்றேன், அவர் மெதுவாகச் சிரித்தார். பிறகு, 'இல்லை யில்லை. இது ஒரு சுவர்மீது ஏறுவதற்காகத்தான். நமக்கு முன்னால் ஒரு பெரிய சுவர் இருக்கிறது. நாமோ பாபாத் துமாக்கள். பாபமோ மறுபுறத்தில் இருக்கிறது—ம். புரிந்ததா?' என்றார். எனக்குப் புரிந்துவிட்டது. இரவில் பெண்களிடம் போவதற்கு அது அவருக்குத் தேவைப் பட்டது. இருவரும் சிரித்தோம்" என்று கூறினாள்.

"உனக்கும் சிரிக்கணும்னு தோணல்லெ?" என்று பெரிய மனுஷ தோரணையில் கேட்டான் சிறுவன்: "சரி. அடுப்பைப் பத்தவையி" என்று தாயிடம் சொன்னான்.

"ஆனால்—சர்க்கரை யில்லையேடா"

"போயி வாங்கிட்டு வா"

"பணமும் இல்லையே"

"எல்லாம் நீ மிடாக்குடி குடிக்கிறதாலேதான்...ம்... அவன் கிட்டே யிருந்து வாங்கிக்கோ"

பையன் என் பக்கம் திரும்பினான், கேட்டான்:

"பணம் வச்சிருக்கியா?"

நான் பணம் எடுத்து அந்தப் பெண்ணிடம் கொடுத் தேன். அவள் துள்ளி யெழுந்தாள். அடுப்பின் மீது களிம்பேறி நெளிந்து கழிந்து போன அந்தப் பாத்தி ரத்தை எடுத்துக்கொண்டு, மூக்கால் முனகிக்கொண்டே, நடையைக் கடந்து மறைந்தாள்.

"அம்மா!" என்று அவள் மகன் கூப்பிட்டான்: "ஜன் னலைக் கழுவி விடு. என்னாலே எதையும் பாக்க முடியலே,

ஏ! உதவாக் கரைச் சிறுக்கி! சொல்றதைக் கேளு" என்று தொடர்ந்து கூறிக்கொண்டே, பூச்சி பொட்டுக்கள் அடங்கிய அந்தப் பெட்டிகளை அரங்கில் பதனமாக அடுக்கினான். நீரூற்றுப் பாய்ந்த சுவர் வெடிப்புகளில் இறக்கப் பட்டிருந்த ஆணிகளில், அந்த அட்டைப் பெட்டிகளை மாட்டினான். "அவுரி பொறுக்கி, அதை அடித்துக் கட்டும்போது, ஒரே புழுதியைக் கிளப்பி விடுவாள், இவள். புழுதின்னு—நீ யெல்லாம் மூச்சடைத்துத் திணற வேண்டியதுதான். 'அம்மா! வெளியே கொண்டு விடு; இங்கே எனக்குத் திகை முட்டுது' என்று கத்துவேன். அதுக்கு அவள், 'அமைதியா யிரு. நீ யில்லாமெ என்னாலே தனிமையா இருக்கமுடியாது'ன்னு சொல்வாள். என்மேலே அவளுக்கு அத்தனை பிரியம். அவுரி பொறுக்குவா; பாடுவாள். அவளுக்கு ஆயிரம் பாட்டுத் தெரியுமாக்கும்!"

ஆவல் நிறைந்த கண்களில் ஒளி தெரிக்க, புருவங்களை உயர்த்தி அவன் பாடவும் ஆரம்பித்தான்.

"அன்னத்தூவி மெத்தையில், அரீனு படுத்துறங்குவாள் ...!"

நான் ஒரு கணம் கேட்டுவிட்டுச் சொன்னேன்:

"சே! அசிங்கமான பாட்டல்லவா?"

"அவுங்களுக் கெல்லாம் இதுதான் பிடிக்கும்" என்று நிச்சய திர்க்கமான குரலில் பதில் கொடுத்து விட்டுத் திடீரென, "காது கொடுத்துக் கேள். ஏதோ பாட்டுச் சத்தம் வருது. என்னைத் தூக்கிவிடு" என்றான்.

வற்றி மெலிந்த தோலுக்குள் அடங்கிய கால்களைப் பற்றி அவனைத் தூக்கி நிறுத்தினேன். திறந்து கிடந்த ஜன்னல் வழியாகத் தலையை வெளியே நீட்டி ஆவலோடு பார்த்தான். வலியிழந்து சூம்பிப்போன கால்கள் சுவரில் சாய்ந்து பலம் தேடின. வெளி முற்றத்தில் ஒரு குழவிசைக் கருவி எரிச்சல் தரும் வண்ணம் சுரபேதங்களை வெளியே துப்பியது. உற்சாகத்தில் ஒரு குழந்தை உச்சஸ்தாயியில் சத்தமிட்டது; ஒரு நாயும் ஊளையிட்டது. லெங்க்கா அந்தப் பாட்டைக் கேட்டுக் கொண்டே, தனது வாய்க்குள் அதே இசையை முனகிக்கொண்டான்.

அந்தப் பொந்துக் குடிலுக்குள் மிதந்த தூசி படிந்து தெளிவுண்டாயிற்று. அவனுடைய தாயின் படுக்கைக்கு மேலாக ஒரு பாடாவதிக் கடிகாரம் தொங்கியது; ஒரு செப்புக் காசு அளவுள்ள அதன் பெண்டுலம் மெதுவாக அசைந்தாடியது. கணப்பருகே இருந்த பண்ட பாத்திரங்கள் அழுக்கடைந்திருந்தன. தூசும் தும்பும் அவை மீதும், மூலையிலே நூலாம்படைக் கூடு கட்டி வாழும் சிலந்தி ஊஞ்சல்களிலும் படிந்தன. லெங்க்காவின் வீடு ஒரு குப்பைக் கிடங்கு மாதிரி இருந்தது; வறுமையின் அவலக்ஷணம் அந்த வீட்டில் எங்கணும் நிறைந்து, புலனை உறுத்திற்று.

பாத்திரம் சூடேறிக் கொதித்து இரைந்தது; அதே வேளை "போ வெளியே" என்ற கடூரமான குரல் கேட்டது; இசை திடீரென நின்றது.

"என்னை உட்கார வையி. அவுங்க அவனை விரட்டிட்டாங்க" என்று பெருமூச்சுடன் சொன்னான் லெங்க்கா.

நான் அவனைப் பெட்டிமீது உட்காரவைத்தேன்; அவன் தனது நெஞ்சுக்கூட்டைக் கைகளால் தடவிக் கொடுத்துக் கொண்டே இருமினான்.

"என் நெஞ்சு வலிக்குது. நல்ல காற்றை ரொம்ப நேரம் மூச்செடுத்தாலே எனக்குப் புடிக்காது. ம், சரி. நீ பேய் பிசாசுகளைப் பாத்திருக்கியா?—"

"இல்லை"

"நானும் இல்லை. ராத்திரி அடுப்பையே பாத்துக் கிட்டிருப்பேன். ஏதாச்சும் தலை காட்டுதான்னு—ஆனா அது வராது. இடு காட்டிலே யெல்லாம் பிசாசு உண்டுல்ல—?"

"உனக்கு எதற்கு அந்தக் கவலை?"

"வேணும், அது கேட்கவே ரசமாயிருக்கு. அதிலே ஒண்ணே ஒண்ணு அன்பு ஏற்பட்டு, நல்லதா மாறி விட்டா? தண்ணீர் வண்டிக்காரன் மகள் கட்கா ஒரு குட்டிப் பிசாசைப் பார்த்தாளாம். உடனே பயந்துட்டா. நான்—? நான் இப்படிப் பட்டதையெல்லாம் கண்டு பயப்பட மாட்டேன்."

அவன் தனது கால்களைத் துணிக்கந்தையில் சுற்றிக் கொண்டு மேலும் சொல்லிக்கொண்டே போனான்: "எனக்குப் பயங்கரமான சொப்பனங்கள் கூடப் புடிக்கும். நிசம்மா! ஒரு தடவை ஒரு மரம் தலை கீழாக வளருற மாதிரி கண்டேன். இலையெல்லாம் தரையிலே—வேரெல்லாம் ஆகாசத்திலே! நான் வேர்த்து விறு விறுத்துப் பயந்து எழுந்தேன். ஒரு தடவை அம்மாவையே பார்த்தேன். அவள் அம்மணமாகக் கிடந்தா. ஒரு நாய் அவள் வயித்தைக் கடிச்சிக் குதைஞ்சிது. ஒரு கடி கடிக்கும்; உடனே அதைத் துப்பும்; கடிக்கும்; துப்பும். இப்படி— ஒரு தடவை எங்க வீடு கிடு கிடென்னு ஆடிச்சி; உடனே தெரு வழியே ஓட ஆரம்பித்தது. கதவு ஜன்ன லெல்லாம் படபடன்னு அடிச்சிது; ஓடற வீட்டைத்தொடர்ந்து இன்ஸ்பெக்டர் பொஞ்சாதியோடே பூனைக் குட்டி ஓடியாந்துது!"

அவன் தனது முதுகை வளைத்தான்; வளைத்து ஒரு சர்க்கரை மிட்டாய் எடுத்து, அதன்மீது சுற்றிருந்த காகிதத்தை எடுத்து, சரி பண்ணி, ஜன்னல் சட்டத்தில் வைத்தான்.

"நானு இந்தப் பேப்பரையெல்லாம் வச்சிக்கிட்டு, அழகாக ஒன்னு செஞ்சி பார்ப்பேன், இல்லேன்னா—கட்காவுக்குக் குடுத்திருவேன். கண்ணாடித் துண்டு, ஓட்டுச் சில்லு, காகிதம்—இது மாதிரிச் சாமான் எல்லாம் அவனுக்குப் புடிக்கும், கேளு—ம்—ஒரு விட்டில் பாச்சையை நல்லா உணவு குடுத்து வளர்த்தா, அது ஒரு குதிரை மாதிரி வளந்திருமா?"

அவன் குரலே அவன் அப்படி நம்புகிறான் என்பதைத் தெரிவித்தது. ஆகவே நானும் சொன்னேன்:

"நீ நல்ல ஊட்டம் கொடுத்து வளர்த்தா, கட்டாயம் வளரும்!"

"வளருமில்லா! ஆனா, அம்மா அப்படிச் சொன்னா என்னைக் கேலி பண்ணிச் சிரிக்கிறா" என்று உற்சாகத்தோடு சொன்னான்.

அவன் ஒரு ஆபாசமான வார்த்தையால் அவளைத் திட்டினான்.

"அவள் ஒரு முட்டாள். ஒரு பூனையை மட்டும் அப்படி உணவு குடுத்து வளர்த்தா, அது ரொம்ப சீக்கிரத்திலே குதிரை மாதிரி வளர்ந்துடாது?"

"ஆமாம். வளரும்!"

"ஆனா, எங்கிட்டெ அவ்வளவுக்கு உணவு இல்லே! அதுக்கு நெறைய வேணுமே!' என்று கூறிவிட்டு, தனது கையை நெஞ்சோடு வைத்துத் தலையாட்டினான்.

"ஈயெல்லாம் நாய் மாதிரி வளந்திரும். வீட்டில் பாச்சையெல்லாம் செங்கல்மாதிரி வளந்திரும்! அதுமட்டும் ஒரு குதிரை அளவு வளர்ந்துட்டா, அதுக்கு ரொம்பப் பலமாயிருக்குமில்லே"

"ஆனால் அதற்கெல்லாம் மீசை இருக்கிறதே!"

"இருந்தா ஒண்ணும் குத்தமில்லே. மீசை கடிவாளம் மாதிரி இருக்கும். ஹை—லகான்!—சிலந்தி எப்படி வளரும்? சிலந்தி ஒரு பூனைக்குட்டி தண்டி வளர்ந்துட்டா, பார்க்கப் பயமாயிருக்கு மில்லே. எனக்கு மட்டும் கால்கள் இருந்தா! வியாபாரம் பண்ணுவேன்! அம்மாவுக்குப் பச்சை வயல்களுக்கு மத்தியிலே ஒரு வீடு வாங்குவேன். நீ எப்பவாச்சும் பச்சை வயல்லே இருந்திருக்கியா?"

"இருந்திருக்கிறேன்"

"அதைப்பத்திச் சொல்லேன்—சொல்லுவியா?"

நான் அவனுக்குப் பசும் புல் வெளிகளைப் பற்றியும், வயற்புறங்களைப் பற்றியும் சொன்னேன். குறுக்கே விழுந்து பேசாமல் அவன் கேட்டுக் கொண்டிருந்தான். கண்ணிமைகள் கண்களின் மேல் மூடிப் பதிய, தூங்கி வழியும் முகம்போல் வாய் மெதுவாகத் திறந்திருக்க அவன் கேட்டுக் கொண்டிருந்தான். இதைப் பார்த்து, நான் அமைதியுடன் கூறிக் கொண்டிருந்தேன். அவனுடைய தாய் கொதியேறிய சட்டியைக் கையில் தூக்கிக்கொண்டும் மறு கையில் ஒரு காகிதப் பொட்டலத்தை வைத்துக்

கொண்டும், மார்பிடுக்கில் ஒரு ஓடகா பாட்டிலை வைத்துக் கொண்டும் உள்ளே வந்தாள்.

"நான் வந்துவிட்டேன்"

"எனக்குப் புடிச்சிருக்கு!" என்று கூறிக்கொண்டே பையன் கண்களை அகலத் திறந்தான்.

"வெறும் இடம்—பூவையும் புல்லையுந் தவிர......"

"அம்மா! ஒரு வண்டி அமர்த்திக்கிட்டு வந்து, என்னை ஏன் வயல் புறத்துக்குக் கூட்டிக்கிட்டுப் போகமாட்டேங்கிறே? நான் சொல்றதுதான் மிச்சம்; அவைகளைப் பார்த்தாப்போலேதான். அம்மா!-ஏ! பொட்டை நாயே!-" சோகமும் குத்தலும் நிறைந்த குரலில் சொன்னான்.

அவன் தாய் அவனை அன்போடு கண்டித்தாள்: "சும்மா திட்டாதே. நீ திட்டக்கூடாது. நீ இன்னும் சின்னவனுய்த்தான்—"

"திட்டக்கூடாதா? எல்லாம் உன் நன்மைக்குத்தான். நீ பாட்டுக்கு நாய் மாதிரி சுத்தரே. நீ அதிருஷ்டசாலி!" என்று கூறிவிட்டு என்னிடம் திரும்பி, "கடவுள்தானே, இந்த வயலையெல்லாம் படைச்சார்?" என்று கேட்டான்.

"நிச்சயமாய்"

"எதுக்காக?"

"ஜனங்களெல்லாம் ஆனந்தமாய்ச் சுற்றிவருவதற்குத்தான்"

"பச்சை வயல்கள்!" என்று பெருமூச்சோடும் பெருமிதத்தோடும் சொன்னான்: "நான் என்னுடைய காட்சி சாலையை அங்கே கொண்டு போயி, அவைகளையெல்லாம் திறந்து விடுவேன். ஓடுங்கடா, பயல்களா! என்பேன்—ம்—கேளு: கடவுளை எங்கே படைக்கிறுங்க?—ஏழையின் வீட்டிலா?"

அவனுடைய தாய் கூச்சலிட்டுக் கொண்டே ஓரேடியாய்ச் சிரித்து ஊளையிட்டாள்; படுக்கையில் விழுந்து சத்தமிட்டாள்:

"அட கடவுளே! என் அருமைக்கண்ணு!—கடவுளைப் படைப்பவர்களா?......விலா வெடிக்கும் ஹாஸ்யமடா!—இவன்தான் கெட்டிக்காரன்"

லெங்க்கா அவளைச் சிரித்தவாறே பார்த்தான். ஆபாசமான வார்த்தைகளில் மெதுவாகத் திட்டினான்.

"அவள் ஒரு குழந்தை மாதிரி. சிரிக்கிறதுன்னு போதும்!" அவன் மீண்டும் அந்த அசிங்கமான பாஷையைச் சொன்னான்.

"சிரிக்கட்டும். நீ அதைக் கவனியாதே" என்றேன் நான்.

"நானு—அதை நான் கவனிக்கலே. ஜன்னலைக் கழுவாம இருக்கப் போயித்தான் அவள் மேலே கோவங் கோவமாய் வருது. ஜன்னலைத் துடைத்துவையின்னு நானும் கேட்டுக் கேட்டுத்தான் பாக்ரேன். கடவுளின் ஒளியையே நான் காணமுடியலே. அவளானு, மறந்துக்கிட்டே இருக்கா" என்றான் பையன்.

அவள் அவ்வப்போது என்னைப் பார்த்துத் தனது நீலக் கண்களைச் சிமிட்டிக்கொண்டும், டீ பாத்திரங்களைக் கழுவிக்கொண்டும் சொன்னாள்:

"நானும் பிரியமுள்ளவன்தானே. இவன் மட்டும் இல்லாவிட்டால், நான் எங்கேனும் எப்போதோ முழுகி இறந்திருப்பேன், தூக்கேனும் போட்டிருப்பேன்"

சொல்லிவிட்டு அவள் புன்னகை புரிந்தாள்.

லெங்க்கா என்னைப் பார்த்துத் திடீரெனக் கேட்டான்:

"நீ ஒரு முட்டாளா?"

"எனக்குத் தெரியாது, ஏன்?"

"இல்லே—அம்மா நீ ஒரு முட்டாள்னு சொல்லுரா?"

"நான் எதற்குச் சொல்லப் போகிறேன்?" என்று அவள் திகிலடையாமல் பதில் கூறிவிட்டு, "அவர் ஒரு குடிகாரியைத் தெருவிலிருந்து கொண்டு வந்து, படுக்கை

யிலே போட்டுவிட்டு, வெளியே போய்விடுகிருர்! அதைத் தான் சொன்னேன். வேறு ஒன்றும் நான் குறிக்கவில்லே. அதை நீ என் மேலே திருப்புகிருயா—சின்னப் பயலே!" என்று மேலும் தொடர்ந்தாள்.

அவளும் ஒரு குழந்தையைப் போலத்தான் பேசினுள். அவளுடைய பேச்சு பருவம் எய்திவரும் இளம் பெண்ணின் பாணியில் இருந்தது. வடுப்பட்டு மூளியான மூக்கும், கோணிய வாயும், இடை விழுந்த பல் வரிசையும் சேர்ந்து, வாலேப் பருவத்தின் புனிதத்துவம் பெற்ற அவள் கண்களேயுங்கூட பயங்கரமாகக் காட்டின. பேய்க் கனவு கண்டு பதறிய பான்மைபோல, அவள் முகம் தென்பட்டாலும் அதிலும் ஒரு குதூகலம் தென்பட்டது.

"சரி. நாம் டீ சாப்பிடுவோம்" என்று அமைதியுடன் சொன்னுள் அவள். லெங்க்காவுக்குப் பக்கத்திலுள்ள பெட்டியின் மேல் டீ பாத்திரம் இருந்தது. கீறல் விழுந்த இடை வழியே வரும் நீராவிப் புகை அவன் தோளில் பாய்ந்தது. அவன் தனது சின்னக் கையை அதற்கு எதிராக ஏந்தி, உள்ளங்கை ஈரமானவுடன் தலேயில் துடைத்துக்கொண்டு, தனது கண்களே ஏறச் சொருகுவான்.

"நான் பெரியவனுன பின் அம்மா எனக்கு ஒரு வண்டி செய்து தருவா. அதிலே நான் இருந்து, தெரு வழியே ஊர்ந்து சென்று பிச்சை கேட்பேன். வேண்டுமட்டும் ஜனங்கள் தந்தப்புறம் நான் பச்சை வயல்களின் பக்கம் போவேன்" என்ருன் சிறுவன்.

"ஹோஹோ!" என்று பெருமூச் செறிந்து விட்டுத் தாய் வாய்விட்டுச் சிரித்தாள். "என் கண்ணுவுக்கு ஊரெல்லாம் சொர்க்கம் மாதிரித்தான்! ஆனுல், நாடு முழுதும் என்ன காண்கிருய்?—மூகாம்கள்! மிருகத்தனம் படைத்த சிப்பாய்கள்! குடிகாரக் குடியானவர்கள்!—"

"நீ பொய் சொல்றே" என்று லெங்க்கா முகத்தைச் சுருக்கிச் சொன்னுன்: "இவனேக் கேளு—ஊர்ப்புறமெல்லாம் எப்படி இருக்குன்னு—இவன் அதைப் பார்த்திருக்கான்."

"அப்படியானால் நான்—நான் மட்டும் பார்க்க வில்லையா?"

"ஆமாமா, குடிச்சுக்கிட்டுக் கிடக்கிறப்போ!"

அவர்கள் இருவரும் சிறு குழந்தைகளைப்போல உற்சாகத்துடனும் தர்க்க ரீதியாகவும் வாதித்தார்கள். அச்சமயம் மாலை வெயில் வெளி முற்றத்தில் விழுந்தது. புரு நிறங் கொண்ட கனத்த மேகம் செக்கர் வானில் நிலைத்துத் தொங்கியது. பொந்துக் குடிலில் இருள் புகுந்துகொண்டிருந்தது.

பையன் ஒரு கப் டீ குடித்தான்; வியர்த்தது. என்னையும் தன் தாயையும் பார்த்துச் சொன்னான்.

"நான் சாப்பிட்டாச்சு, நான் குடிச்சாச்சு, இப்போ—எனக்குத் தூக்கமா வருது"

"சரி தூங்கப் போ" என்று சொன்னாள் தாய்.

"ம்...அவன்—அவன் போயிருவான்—நீ போவப் போறியா?"

"கவலைப்படாதே, அவரைப் போகாமல் நான் பார்த்துக் கொள்கிறேன்" என்று கூறிக்கொண்டே அவள் தன் முழங்கையால் என்னை இடித்தாள்.

"நீ போகவேண்டாம்" என்று வேண்டியவாறே கண்களை மூடிப் பெட்டிக்குள் சாய்ந்தான். திடீரென்று தலையை உயர்த்தித் தன் தாயிடம் கண்டிப்பான குரலில் சொன்னான்.

"இவனை ஏன் நீ கலியாணம் பண்ணிக்கக்கூடாது? கலியாணம் பண்ணிக்கிட்டு, மத்த பொம்பளைகளைப்போல நீயும் ஏன் இருக்கக்கூடாது? எல்லா மாதிரி ஜனங்கள் கிட்டேயும் ஏன் பழகுறே? அவங்க உன்னை அடிக்கத் தானே செய்தாங்க. ஆனா, இவன்—இவன் ரொம்ப நல்லவன்"

"உஷ், உறங்கு" என்று மெதுவாகக் கூறிவிட்டு, அவள் தன் கையிலிருந்த டீ கப்பில் தனது முகத்தைக் கவிழ்த்தாள்.

"இவன் பணக்காரன்!"

ஒரு கணம் அவள் அமைதியாயிருந்தவாறே, கோப்பையிலிருந்த டீயைத் தனது உதடுகளால் உறிஞ்சினாள். பிறகு ரொம்பப் பழகிப்போனவள் மாதிரி என்னைத் திரும்பிப் பார்த்தாள்.

"இப்படித்தான் நானும் அவனும்—நாங்கள் இருவர் மட்டும்—வாழ்கிறோம். அக்கம்பக்கத்தில் என்னை ஒழுங்கு முறையற்றவள் என்று தூற்றுகிறார்கள். ஆனால் நான் யார் முன்னும் வெட்கப்படுவதில்லை. நான் எவ்வளவு அவலக்ஷணமானவள்—இருந்தாலும், நான் எதற்கு நல்லவள் என்றுதான் ஒவ்வொருத்தரும் பார்க்கிறார்கள். ஆம். என் மகன் தூங்குகிறான். எனக்கு இவன் நல்ல பிள்ளை தானே!—ம்"

"ஆமாம். ஆமாம்"

"ஆனால், நான் அவனைச் சரியாகக் கவனிக்க முடியவில்லை. அவனுடைய மூளையைத்தான் பாருங்களேன்!"

"ஆமாம், ரொம்பக் கெட்டிக்காரன்தான்"

"வாஸ்தவம். அவன் தந்தை ஒரு பெரிய மனுஷர்; கிழவர். அவரை நீங்கள் என்ன சொல்லுவீர்கள்?—அவர்களுக்குப் பல ஆபீஸ்களும் உண்டு. அப்பா! எப்போதும் பேப்பர்களோடுதான் மாரடிப்பு!"

"என்ன சொல்கிறாய்?—அவர் ஒரு பிரமுகர் என்கிறாயா?"

"ஆமாம். அவர் அன்பானவர்; வயதானவர். ரொம்ப அன்புடையவர். அவர் என்னைக் காதலித்தார். நான் அவர் வீட்டில் வேலைக்காரியாயிருந்தேன்.

"பிறகு அவர் திடீரென்று இறந்து போய்விட்டார். அப்போது இரா வேளை. அவர் தரையில் சாய்ந்து உயிர் விட்டவுடனேயே நான் அங்கிருந்து வந்துவிட்டேன். ம்... நீங்கள் 'க்வாஸ்' பீர் விற்கிறீர்களா?"

"ஆமாம்"

"சொந்த வியாபாரமா?"

"இல்லை, இன்னொருத்தர் வியாபாரம். நான் வேலை செய்கிறேன்."

அவள் என்னை நெருங்கி வந்தாள்.

"ஐயோ—என்னைப் பார்த்து முகத்தைத் திருப்ப வேண்டாம். அந்த வாடையே இனி அடிக்காது. தெரிவி லுள்ள யாரையும் கேட்டுப் பாருங்கள். அவர்களுக்குத் தெரியும்" என்றாள்.

"நான் ஒன்றும் முகத்தைத் திருப்பவில்லையே!"

வேலை செய்து மரத்துத் தொய்ந்து போய், நகம் தேய்ந்த விரல்களை என் மடியில் போட்டுக் கொண்டே அவள் சொன்னாள்:

"லெங்க்காவின் சார்பில் உங்களுக்கு நான் நன்றி கூறவேண்டும். அவனுக்கு இன்று இன்பப் பொழுதாகக் கழிந்தது. எல்லாம் உங்களால் தான்."

"சரி நான் போக வேண்டும்" என்றேன்.

"எங்கே?" என்று ஆச்சரியத்துடன் கேட்டாள்.

"வேலை இருக்கிறது"

"இருங்களேன்"

"இல்லை. முடியாது."

அவள் மகனைப் பார்த்தாள்: ஜன்னலைப் பார்த்தாள். வானைப் பார்த்தாள். பிறகு மெதுவாகச் சொன்னாள்: "தங்குங்கள். நான் எனது ஜாடியைக் கைக் குட்டையால் மூடிவிடுகிறேன். என் மகன் சார்பில் உங்களுக்கு நான் வந்தனம் கூற வேண்டுமல்லவா?"

அவள் ஆணித்தரமாக, அன்பாக இதய நெகிழ்ச்சி யோடு பேசினாள். அவளுடைய கண்கள், பயங்கர முகத் தில் அமைந்த பச்சிளம் கண்கள் புன்னகையோடு பிர காசித்தன. பிச்சைக்காரியின் புன்னகையல்ல; நன்றி யறிதலை நல்ல வழியில் காட்டும் செல்வந்தனின் புன்னகை அது.

"அம்மா" என்று பையன் கத்திக்கொண்டு உதறி யெழுந்தான், "அவைகள் போகின்றன. அம்மா வா"

"சொப்பனம் காணுகிருன்" என்று கூறிக்கொண்டு அவள் குனிந்து பார்த்தாள். சிந்தனையில் மூழ்கியவனுய் நான் வெளி வந்தேன். அந்த மூங்கைக் குரல் ஜன்னல் வழியாகப் பாட்டாகப் பாய்ந்து வந்தது. தாய் மகனுக்கு அதிசயமான தாலாட்டுப் பாடினுள். வார்த்தைகள் தெளி வாயிருந்தன.

தேடி வரும்பல ஆசைகளும்
கேடு பலவிதம் கொண்டு வரும்!
கொண்டு வருங் கொடுந்துன்ப மெனைத்
துண்டு துண்டாக்கியே துன்புறுத்தும்!
வெந்திடுந் துன்பத்துக் கஞ்சிடிலோ
பொந்தினில் வாழ்வதோ சொல்மகனே !

நான் வாயை இறுக மூடிக்கொண்டு, விறு விறு என்று நடந்தேன்.



# சிவப்பன்

ஓல்கா நதிக் கரையில் அமைந்த ஒரு நகரத்தின் விபச்சார விடுதி யொன்றில் வாஸ்கா என்ற நாற்பதுவயது மனிதன் வேலை பார்த்து வந்தான்; அவனுக்கு 'சிவப்பன்' என்ற பட்டப் பெயரும் உண்டு. கனத்துத் தோன்றும் அவனது முகத்தின் பச்சை மாமிச நிறமும், ஒளி நிறைந்த செம்பட்டைச் சிகையுமே, இந்தப் பட்டப் பெயருக்குக் காரணங்கள்.

தடித்த உதடுகள்; சருவச் சட்டியின் கைப்பிடியைப் போல, கபால மூலத்திலிருந்து துருத்தி நிற்கும் பெரிய காதுகள்; ஒளியற்ற தன் சிறு கண்களில் கொடூர பாவம் தெறிக்க, அவன் பிறரைப் பார்க்கும் பார்வை; தடித்து மதமதர்த்த உடற்கட்டு அவனுக்கு இருந்த போதிலும் சதைக்குள் புதைந்து பனிக்கட்டித் துண்டுகள் போல் ஒளிரும் அந்தக் கண்களில் அகோரப் பசிவேட்கையே தென்பட்டுக் கொண்டிருக்கும். குள்ளமும் குண்டுமா யிருந்த வாஸ்கா, நீலநிற 'கோசாக்' கோட்டும், அகன்ற கம்பளிக் கால்சராயும், மெல்லிய கோடிட்ட பூட்ஸுகளும் மாட்டியிருந்தான். அவனுடைய செம்பட்டைத் தலைமயிர் சுருள் சுருளாக வளர்ந்திருந்தது. அவன் தொப்பி வைத்துக்கொண்டால், அவை தொப்பி யோரங்களில் சுருண் டெழுந்து, சிவப்பூப் பூக்கள் போல அழகு காட்டிக்கொண் டிருக்கும்.

அவனுடைய தோழர்கள் அவனை 'சிவப்பன்' என்று அழைத்தார்கள்; அங்குள்ள பெண்கள் அவனைக் 'கொலைகாரன்' என்று அழைத்தார்கள். காரணம், அவன் அவர்களைச் சித்திரவதை செய்ய விரும்புவான். அந்த நகரில் பல வகைப் படிப்புப் பெற்றவர்களின் கழகங்கள் பல உண்டு; வாலிபர்களும் அதிகம். எனவே, அந்த வட்டாரம் முழுவதிலும் பல விபச்சார விடுதிகள் தெருத்தெருவாக,

வரிசை வரிசையாக இருந்தன. அந்த விடுதிகளிலெல்லாம் வாஸ்கா அறிமுகமான பேர்வழி. அவனுடைய பெயரைக் கேட்டாலே அங்குள்ள பெண்களுக்குக் கிலி உண்டாகும். அவர்களுக்கும், விடுதித் தலைவிக்கும் ஏதாவது சண்டை மூண்டால் உடனே தன் எதிராளியைப் பார்த்துத் தலைவி பயமுறுத்திச் சொல்வாள்:

"இங்கே பார். என் பொறுமையைச் சோதிக்காதே இல்லையென்றால் நான் சிவப்பனைக் கூப்பிடுவேன்!"

சமயங்களில் இந்தப் பயமுறுத்தலே தலைவியின் காரியத்தைச் சாதிப்பதற்கும், பெண்கள் அடங்கிப் போவதற்கும் போதுமானதாகும். அவர்கள் காரியங்கள் எல்லாம் அநேகமாக நியாயமான கோரிக்கைகளாகவே இருக்கும்.

நல்ல உணவுக்காக, அல்லது காற்று வாங்குவதற்கு வெளியில் சென்று வர-இப்படி ஏதாவது கோரிக்கை தான். வெறும் பயமுறுத்தல் மட்டும் பலனளிக்கவில்லையானால், விடுதித் தலைவி வாஸ்காவுக்கு ஆள்மூலம் சொல்லி அனுப்புவாள்.

வாஸ்கா அவசரமே அற்ற மனிதன் போல் நிதானமாக வருவான்; தலைவியின் அறைக்குள் சென்று தாளிட்டுக் கொள்வான். தலைவி தண்டிக்கப்பட வேண்டிய பெண்களின் பெயர்களை வரிசையாக ஒப்பிப்பாள். அவன் வாய்திறந்து ஒரு வார்த்தையேனும் பேசாது, முற்றும் கேட்டு விட்டுக் கடைசியில் பதில் சொல்வான்:

"சரி, ஆகட்டும்."

பிறகு அவன் அந்தப் பெண்களிடம் வருவான். அந்தப் பெண்கள் பயத்தால் வெளுத்து வெலவெலத்துப் போவார்கள். அவன் அந்தப் பயத்தைக் கண்டு ஆனந்திப்பான். அந்தப் பெண்கள் சமையலறையில் இருந்து உணவோ தேநீரோ அருந்திக் கொண்டிருக்கும் சமயமாயிருந்தால், அவன் வாசல் நடையில் சாய்ந்து அசைவற்ற சிலையைப்போல அவர்களையே பார்த்துக் கொண்டிருப்பான்; அந்தப் பெண்களுக்குத் தாம் அனுபவிக்கப் போகும் துன்பங்களைவிட அந்தப் பார்வையின் ஒவ்வொரு கணமுமே துயருறுத்துவதாக இருக்கும். ஒரு

கணம் அப்படியே பார்த்துக் கொண்டிருந்துவிட்டு, அவன் வாய்விட்டு அழைப்பான்:

“மாஸ்கா, வா இங்கே”

“வாஸிலி மிரோனிச், என்னைத் தொடாதே. தொட்டால், நான் என் தொண்டையை நெரித்து விடுவேன்...” என்று அந்தப் பெண் சமயங்களில் அழுத்தமாகவும் கண்டிப்பாகவும் சொல்லுவாள்.

“சீ, முட்டாள்! வா இங்கே. உனக்கு நானே கயிறு தருகிறேன்.” வாஸ்கா கொஞ்சங்கூடத் தயக்கமே இல்லாது சொல்லுவான். குற்றவாளிகள் தாமாகவே தன்னிடம் வர வேண்டும் என்பது அவன் விருப்பம்.

“நான் உதவி கோரிக் கூச்சலிடுவேன்! ஜன்னல்களை உடைத்தெறிவேன்.”

அந்தப் பெண் பயத்தால் தொண்டை யடைக்க, தான் செய்ய வேண்டியவற்றை ஒரு கணம் நினைத்துப் பார்ப்பாள்.

“ஜன்னலை மாத்திரம் உடை, பார்ப்போம். உடைந்த கண்ணாடி முழுவதையும் உன்னையே தின்ன வைக்கிறேன்” என்பான் வாஸ்கா.

பல தடவைகளில், அந்தப் பெண்ணே தனது பிடிவாதத்தைக் கைவிட்டு அந்தக் ‘கொலைகாரனை’ நெருங்குவாள். அவள் வர மறுத்தால், வாஸ்காவே அவளிடம் நெருங்கிச் சென்று அவள் தலைமயிரைப் பற்றிப் பிடித்திழுத்து, தரையில் மோதி யெறிவான். அவளைப் போலவே மன உணர்ச்சி பெற்ற அவளுடைய தோழிகளே அவளுடைய கையையும் காலையும் கட்டி, அசைய வொட்டாது செய்ய, அந்தத் தோழியரின் கண் முன்னாலேயே குற்றவாளி சமையல் கட்டிலேயே உருட்டித் தள்ளப்பட்டு தண்டனையை அனுபவிப்பாள். அந்தப் பெண் மட்டும் உணர்ச்சி ஆவேசமுள்ளவளாயிருந்து, எதிர்த்துக் குற்றம் சாட்டுவதா யிருந்தால், தோலைப் பிய்த்தெறிந்து தடித்துப் போகாத வண்ணம் செய்யும் ஈரத் துணியால் சுற்றப்பட்ட பலத்த தோல்வாரால் விளாசப் படுவாள்.

கல்லும் மணலும் கலந்து பொதிந்த நீளத் துணிச் சுருளே களும் இதற்குப் பயன்படுத்தப்படும். இம் மாதிரியான துணிச் சுருளேயைக் கொண்டு, பிருஷ்ட பாகத்தில் அடித்தால், ஊமையடி பலத்து விழுந்து, தாங்க முடியாத வேதனே புகுந்து பல நாள் அந்த ஸ்தானத்தில் நிலேத்து நிற்கும்......

தண்டனேயின் குரூரம் குற்றவாளியின் குணத்தைப் பொறுத்ததல்ல; சிவப்பனின் மன இரக்கத்தையும், குற்றத்தின் தன்மையையும் பொறுத்ததே. சமயங்களில் எந்த வித முன்னேற்பாடுகளும் இல்லாமல், ஈவிரக்கமின்றித் தன்னே எதிர்த்துப் போராடும் பெண்களே விளாசித் தள்ளி விடுவான். அவனுடைய கால் சராய்ப் பையில் எப்போதும் மூன்று கவருள்ள ஒரு சாட்டை இருக்கும்; சாட்டையின் மரக் கைப்பிடி பழகிப் பழகி மெருகேறிப்போயிருக்கும். சவுக்குக் கவர்களில் மெல்லிய கம்பிகளும் சேர்த்துப் பின்னப்பட்டு, முனேயில் ஒரு குஞ்சம் போலத் தொங்கும். அதனுல், அந்தச் சவுக்கின் முதல் சொடுக்கிலேயே அது தோலேப் பிய்த்திறங்கி, உள்ளெலும்பைத் தொட்டுப் பார்க்கும். பிய்ந்துபோன பாகத்திலுள்ள வேதனேயை அதிகமாக்குவதற்காக, மசாலாவாவது, உப்புத் தண்ணீரில் நனேத்த துணியாவது காயத்தின் மேலே போடப்படும்.

அந்தப் பெண்களேத் தண்டிக்கும்போது, வாஸ்கா எந்தவித உணர்ச்சியையும் காட்டிக் கொள்ள மாட்டான். கடின சித்தமும் அமைதியும் எப்போதும் அவனிடம் ஒன்று போலவே இருக்கும்; அவன் கண்களிலுள்ள அகோரப் பசியும் தணிந்திருக்காது. சமயங்களில் அந்தப் பசி அதிகரித்துத் தீக்ஷண்யமாகப் பிரதி பலிக்கவும் செய்யும்.

தண்டனே முறைகள் இத்துடன் நின்று விடுவதில்லே. புதுப் புது முறைகளேக் கண்டு பிடித்துக் கொண்டிருப்பதில் வாஸ்கா சளேத்தவனல்ல. தண்டனே முறைகளேக் கண்டு பிடிப்பதில் அவன் தனது சிருஷ்டி சக்தியின் சிகரத்துக்கே சென்று விடுவான்.

உதாரணமாக, அந்த விடுதிகளில் ஒன்றிலிருந்து வீரா கோப்டெவா என்ற பெண்ணின் கதையைப் பார்க்கலாம். வந்திருந்த விருந்தாளியிடமிருந்து ஐயாயிரம் ரூபிள்களைத் திருடிவிட்டதாக அவள் மீது சந்தேகம். சைபீரிய வியாபாரியான அந்த விருந்தாளி, தான் வீராவின் அறையில் வீராவுடனும், ஸாராஷெர்மான் என்ற இன்னொரு ஜோடியுடனும் இருந்ததாகப் போலீஸில் தாக்கல் செய்தான். அன்றிரவு ஒருமணி நேர காலத்துக்குப் பின் ஸாரா போய் விட்டதாகவும், மீதிப் பொழுதையும் தான் வீராவுடனேயே கழித்ததாகவும், அவளை விட்டுப் பிரிந்த நேரத்தில், தான் குடிவெறியில் இருந்ததாகவும் பிராது பண்ணினான்.

வழக்கு தன் போக்கில் சென்றது. விசாரணை நடந்து கொண்டேயிருந்தது. பிரதிவாதிகள் இருவரும் ஜெயிலில் வைக்கப்பட்டு விசாரிக்கப்பட்டனர். முடிவில் தக்க சாட்சியமில்லாததால், கேஸ் தள்ளுபடி செய்யப்பட்டது.

அந்தப் பெண்கள் தங்கள் எஜமானியிடம் திரும்பி வந்ததும், இன்னொரு விசாரணை ஆரம்பமாயிற்று. எஜமானி அவர்கள் தான் திருடினார்கள் என்பதில் நிச்சய புத்தியுடனிருந்ததால், தனக்குரிய பங்கைக் கொடுக்கும்படி கேட்டாள்.

தனக்கும் அந்தத் திருட்டுக்கும் எந்த விதச் சம்பந்தமும் கிடையாது என்பதை நிரூபிப்பதில் ஸாரா வெற்றி பெற்று விட்டாள். ஆகவே, எஜமானி வீராவைப் பரிசீலனை செய்ய ஆரம்பித்தாள். வீராவைக் குளிக்கும் அறையில் அடைத்து வைத்து, உப்பு அதிகம் சேர்ந்த உப்புமாவையே உணவாகக் கொடுத்து வந்தாள். எனினும், அந்தப் பெண், தான் பணத்தை ஒளித்து வைத்திருக்கும் இடத்தைச் சொல்பவளாய்க் காணோம். ஆகவே, எஜமானி வாஸ்காவின் உதவியை நாட வேண்டிய அவசியம் ஏற்பட்டது. பணம் இருக்குமிடத்தை மட்டும் அவன் கண்டுபிடித்துச் சொல்லிவிட்டால், நூறு ரூபிள்கள் இனாம் தரப்படும் என்று வாக்குறுதி அளிக்கப்பட்டது.

ஆகவே, அந்தப் பிசாசு வீராவிடம் வந்தது. வீரா குளிக்கும் அறையில் கூனிக் குறுகி, பசியாலும், பயத்தாலும், இருளாலும் வெருண்டு வாடி, முடங்கிக் கிடந்தாள். வாஸ்காவின் தொளதொளத்த கரிய உடம்பிலிருந்து பாஸ்வர நாற்றமும் புகை நாற்றமும் அடித்தன. கண்களிருந்த இடத்தில் இரு நெருப்புக் கங்குகள் கனன்றன. அவன் அவள் முன் நின்று கிடுகிடுக்கும் குரலில் கேட்டான்.

"பணத்தை எங்கே?"

பீதியினால் அவள் மதிமயங்கி விட்டாள். இந்தச் சம்பவம் மாரி காலத்தில்தான் நடந்தது. மறுநாள் காலையில் கனத்துப் பெய்யும் மூடுபனியின் வழியாக, ரவிக்கையைத் தவிர வேறு ஆடையின்றி அவள் வெளியே அழைத்து வரப்பட்டாள். அவள் மெதுவாகச் சிரித்துக் கொண்டே, களிப்புடன் சொன்னாள் :

"நான் நாளைக்கு அம்மாவிடம் போய்விடுவேன்! அம்மாவோடு கலந்து விடுவேன்!"

ஸாரா இதையெல்லாம் பார்த்த பிறகு, திகிலடித்துப் போய் ஒவ்வொருவரிடமும் சொன்னாள் :

"ஆனால்—பணத்தைத் திருடியவள் நான்தான்."

அந்தப் பெண்கள் வாஸ்காவை மிகவும் வெறுத்துப் பயந்தொதுங்கினார்களா என்பதைச் சொல்வது கடினம். அவனுக்கு வசதிகள் செய்து கொடுத்து அவன் பிரியத்தைச் சம்பாதிக்க எண்ணினார்கள். ஒவ்வொருத்தியும் தான்தான் அவனுடைய 'நபர்' என்பதைத் தெரிவித்துக் கொள்வதில் பெருமைப் பட்டார்கள். அதே வேளையில் தம்மிடம் வரும் டாபர்கள், விருந்தாளிகள், புரட்டுக்காரர்கள் முதலியோரிடம் சிவப்பனை மொக்கி உதைப்பதற்கும் தூண்டி விட்டார்கள். ஆனால், அவனோ மிகுந்த பலம் படைத்தவன்; மேலும் அவன் குடிப்பதுமில்லை. ஆகவே அவனை யாரும் நெருங்க முடியவில்லை. பல தடவைகளில் அவனுக்குக் கொடுக்கும் உணவிலும், தேநீரிலும், நஞ்சு கலந்து வைக்கப்பட்டது. அதனால் அவன்

ஓரளவு கஷ்டப்பட்டாலும், மீண்டும் கடைத்தேறி வந்து விட்டான். மேலும், தனக்கு எதிராக வீசும் சூழ்நிலையை எப்படியோ அவன் மோப்பம் பிடித்து விடுவான். எண்ணற்ற விரோதிகளின் மத்தியில் உயிருக்கு ஆபத்து வரக் கூடிய சூழ்நிலையில் வாழ்கிறோம் என்ற பிரக்ஞை அவனுக்கு இருந்த போதிலும், அதனால் அவனுடைய கொடுமை குறையவோ கூடவோ செய்யவில்லை. தனக்கே உரிய வழக்கமான திடசித்தத்தோடு அவன் கூறுவான்:

"உங்களுக்குச் சந்தர்ப்பம் மட்டும் கிடைத்தால், என்னைக் கடித்துக் குதைத்து எறிந்து விடுவீர்கள் என்பது எனக்குத் தெரியத்தான் செய்யும். ஆனால் உங்கள் சக்தியெல்லாம் பிரயோசனப்படாது. நான் எதற்கும் அசைய மாட்டேன்."

தனது தடித்த உதடுகளைப் பிதுக்கிக் காட்டிக் கொண்டு அவன் அவர்களைப் பார்த்து உறுமுவான். இப்படித்தான் அவன் அவர்களை நக்கல் செய்வான்.

அவனுடைய கூட்டாளிகள் எல்லாம் போலீஸ்காரர்களாகவும், புரட்டுக்காரர்களாவும், துப்பறிபவர்களாகவுமே இருப்பார்கள். அவர்களும் எங்கேனும் விபச்சார விடுதிகளில்தான் அநேகமாய்க் காணப்படுவார்கள். அவர்களில் எவருமே அவனிடம் நெருங்கிய நண்பரானது கிடையாது; அவனும் யார் மீதும் பிரத்தியேகத் தொடர்போ அன்போ கொள்வது கிடையாது. எல்லோரிடமும் அவன் ஓரே மாதிரியான முசுறுக் குணத்தோடு தான் பழகுவான். அவன் அவர்களோடு பீர் அருந்துவான்; ஊரில் உலவும் ராத்திரி வதந்திகளைப் பற்றிப் பேசுவான். தனது எஜமானியின் வீட்டை விட்டு வேலை யிருந்தாலொழிய வெளியே போகமாட்டான்; வேலை என்பது எங்கேனும் அடி கொடுப்பதாக—அதாவது, அவர்கள் பாஷையில், ஒரு பெண்ணின் மனத்தில் ஈசுவர பயத்தைச் சிருஷ்டிப்பதாகவே—இருக்கும். அவன் வேலை பார்த்து வந்த விடுதி ஒரு மத்தியதர வகுப்பைச் சேர்ந்தது. அதற்குப் பிரவேசக் கட்டணம் மூன்று ரூபிள்கள்; இரவு முழுதுமென்றால் ஐந்து ரூபிள்கள். விடுதித் தலைவி பெக்லாயெர்

மோலாயிவ்னு ஐம்பது வயதான தடித்த மாது; குரோத மும் கோபமும் குடிகொண்டவள். அவள் வாஸ்காவைக் கண்டு மிகவும் பயப்படுவாள். ஆகவே, தான் அவனுக்கு வைப்பாயிருந்ததும் போதாதென்று, அதிகப்படிச் சம்பள மாக மாதம் பதினைந்து ரூபிள்களும் கொடுத்து வந்தாள். விடுதியில் வாஸ்காவுக்கு சவப் பெட்டி போன்ற தனியறை உண்டு. வாஸ்கா அங்கேயே குடியிருந்ததனால், விடுதிப் பெண்களுக்கிடையே அமைதி நிலவியது. அங்கு பதினொரு பேர் இருந்தனர்; அத்தனை பேரும் ஆடுகள் மாதிரி பயந்தாங் கொள்ளிகள்.

விடுதித் தலைவி எப்போதாவது தனது விருந்தாளி களிடம் அங்குள்ள பெண்களைப் பற்றி, ஆடுமாடு பன்றி களைப் பற்றிப் பெருமை யடித்துக் கொள்வது போலப் புகழ்ந்து பேசுவாள்.

"என்னிடமுள்ள சரக்கெல்லாம் நயமானவை" என்று சிரித்துக்கொண்டே கர்வத்துடனும் திருப்தியுடனும் சொல்வாள். "இங்குள்ள பெண்களெல்லாம் புதுசு, நயமா னவர்கள். எல்லோருக்கும் மூத்தவளுக்கே இருபத்தாறு வயசுதான். அவள் சுவாரசியமாகப் பேசிக் கொண்டிருப் பதற்கு ஏற்றவளில்லைதான்! ஆனால்—அவள் உடம்பு இருக்கிறதே! அம்மாடி!—நீங்களே ஒரு பார்வை பாருங்க ளேன். பெண்ணா அவள்?—பேரதிசயமல்லவா!—சூஸ்க்கா! இங்கே வாடியம்மா?......" என்பாள்.

சூஸ்க்கா வாத்து நடை பழகி வந்து சேருவாள். விருந்தாளி அவளைக் கூர்ந்து பார்த்து எடை போடுவார்; அவளுடைய உடற்கட்டு அவருக்குத் திருப்தி யளிக்கும்.

அவள் மிதமான உயரமும் சதைப்பிடிப்பும் கொண்ட வள்; ஒரே உலோகத்தில் அடித்து உருவாக்கியது போலத் திண்மை நிறைந்தும் இருந்தாள். பருத்து உயர்ந்த மார் பகம்; வட்டமான முகம்; செக்கச் சிவந்த இதழ்கள் கொண்ட சிறிய வாய்; பொம்மையின் பாசி மணிக் கண் களைப் போல் ஒளியற்று உணர்ச்சியற்றுப் போன கண்கள்; மொட்டை மழுங்கட்டையான மூக்கு; கத்தரித்து விடப்பட்ட புருவக்கீற்று—இத்தனையும் சேர்ந்த அந்தப்

பொம்மையின் உருவம் விருந்தாளிக்கு அவளிடம் பேச வேண்டும் என்றிருந்த உணர்ச்சியையும் கொன்றுவிடும். ஆகவே அவர் ஒரே ஒரு வார்த்தைதான் சொல்வார்.

"வா."

அவளும் உடம்பை ஆட்டி அசைத்து நடைபழகி, அர்த்தமற்ற புன்னகை செய்துகொண்டு கண்களை இடமும் வலமும் உருட்டி விழித்தவாறே அவருடன் செல்வாள். இதெல்லாம் விடுதித் தலைவியால் அவளுக்குக் கற்றுத்தரப்பட்ட சாகசங்கள். இதற்கு 'அதிதியை ஆகர்ஷிப்பது' என்று பெயர். அதிதியை ஆகர்ஷிக்கும் இந்தக் கண்வெட்டு எல்லாம், நன்றாக உடை உடுத்தியவுடனேயே வந்துவிடும். பிறகு அவள் தனிமையிலிருந்தாலும், பிற பெண்களுடனிருந்தாலும், அதிதியுடனிருந்தாலும் அந்தக் கண்கள்மட்டும் அர்த்தமற்று உருண்டு கொண்டே இருக்கும்.

அவளிடம் இன்னொரு விபரீதச் செய்கையும் உண்டு. தனது நீண்ட ஜடையை கழுத்தைச் சுற்றிப் போட்டு, ஜடை முனை மார்பின்மேல் தொங்க, அதைத் தனது கையால் பிடித்து, ஏதோ சுருக்குக் கயிற்றைத் தாங்கும் பாவனையில் நிற்பாள்.

மேலும் அவள் தன்னைப் பற்றியே அதிகம் சொல்லிக் கொள்வாள். தன் பெயர் அக்சின்யா காலுஜினு என்றும், தான் ரைய்ஜான் மாகாணத்தைச் சேர்ந்தவள் என்றும், ஒரு தடவை பெட்காவுடன் 'பாபகிரியை' செய்ததால், ஒரு குழந்தைக்குத் தாயானாள் என்றும், அதன் பின் ஒரு ஆப்காரி உத்தியோகஸ்தரின் குடும்பத்தோடு நகருக்கு வந்தாள் என்றும், வந்த இடத்தில் செவிலித் தாயாக வேலை பார்த்தாள் என்றும், பிறகு தன் குழந்தை இறந்து போகவே, வேலையிலிருந்து விலக்கப்பட்டு, இந்த விடுதியில் 'வேலை பார்க்க' வந்ததாயும், வந்து நாலு வருஷ காலம் ஆகிறதென்றும் தெரிவிப்பாள்.

"இந்த இடம் பிடித்திருக்கிறதா?" என்று அதிதியிடமிருந்து கேள்வி பிறக்கும்.

"பிடித்திருக்கிறது. வேண்டுமட்டும் உணவு உடை கிடைக்கிறது...காலுக்குச் செருப்பும் கிடைக்கிறது...... இங்கே அமைதி மட்டும் கிடையாது...மேலும், வாஸ்கா... அவன் வேறு அடித்துத் தொலேப்பான்—பிசாசு!"

"அப்படியானுல், இங்கு இருக்க உனக்கு சந்தோஷமாயிருக்கிறதல்லவா?"

"அது எங்கே?" என்று தலையைத் திருப்பிக் கொண்டே பதிலளிப்பாள்; பிறகு தாழ்வாரத்தில் கண்களைப் பாய்ச்சி, மகிழ்ச்சி நிறைந்த காலத்தை எதிர்பார்ப்பது போல் பார்ப்பாள்.

அந்த இடத்தைச் சுற்றிக் குடிவெறியும் கூச்சலும் கும்மாளம் போடும். தலைவியும் பிற பெண்களும் மேல் மாடியில் கூத்தடிப்பதும் கேட்கும். இதெல்லாம் அவளுக்குப் பழகிப் போனவை.

அவள் உச்சஸ்தாயியில்தான் பேசுவாள்; கிண்டலுக்கு ஆளாகும் போது உரத்த குரல் படைத்த விவசாயியைப் போல, பலத்துச் சிரிப்பாள்; சிரித்து அதிர்வாள். அங்குள்ள பெண்களுக்குள் குறும்பிலும், ஆரோக்கியத்திலும் அவளே சிறந்தவள். ஆகவே அவள் பிறரை விட அதிகச் சந்தோஷம் கொள்பவளாகவே இருப்பாள். ஏனெனில் அவர்களுக்குள் அவள்தான் மிருகத் தன்மையை அணுகிவிட்டவள்.

வாஸ்கா அந்த விடுதியில் வேலை பார்க்கப் போய், விடுதிப் பெண்களின் பகையையும் பயத்தையும் அவன் சம்பாதித்திருந்தது வாஸ்தவம். எனினும் அந்தப் பெண்கள் குடிவெறியில் தமது உணர்ச்சிகளை மறைத்து வைக்காது, அதிதிகளிடம் வாய் திறந்து வாஸ்காவைப் பற்றிக் குற்றம் கூறுவார்கள். ஆனுல் அதிதிகள் அவர்களைக் காப்பாற்றுவதற்காக அங்கு வராத காரணத்தால், அவர்களுடைய குற்றச் சாட்டுகளில் அர்த்தமும் கிடையாது; அதனுல் பலனும் கிடையாது. சமயங்களில் அவர்கள் அழுதுகொண்டே, பெருங் கூச்சலிட்டால், வாஸ்காவின் காதுகளில் அந்தக் குரல் விழுந்துவிடும். உடனே, அவனது தலை தாழ்வாரத்தில் தோன்றும்; அதைத்

தொடர்ந்து உணர்ச்சியற்ற குரலில் அவனுடைய ஆணைக் குரலும் கேட்கும்.

" ஹி-உன்னைத்தானே! — முட்டாள்தனமாய் நடக்காதே."

"கொலைகாரா! பூதமே!" என்று அந்தப் பெண் கத்துவாள். "என்னை எப்படி நீ மரியாதைக் குறைவாய்ப் பேசலாம்? பாருங்கள், மிஸ்டர்! பாருங்கள்—அவன் எப்படி என் முதுகைச் சவுக்கினால் அடித்திருக்கிறான்!—" என்று கூறிக்கொண்டே, தனது ரவிக்கையைக் கிழித்துக் காட்ட முயல்வாள்.

வாஸ்கா நேராக அவளிடம் சென்று அவளைக் கையோடு பிடித்திழுத்து ஸ்திரமான பயங்கரக் குரலில் கண்டித்துக் கூறுவான் :

"ம், சத்தம் போடாதே, உஷ்!—என்ன உளறுகிறாய்! குடித்திருக்கிறாயா? பார் இப்போ."

இந்தக் கண்டிப்பே அவளுக்குப் போதும்; அந்தப் பெண்ணை வெளியில் இழுத்துக் கொண்டு வரவேண்டிய நிர்ப்பந்தம் சில சமயங்களில்தான் ஏற்படும்.

பல பெண்கள் அவனுடைய வைப்பாட்டிகளாக இருந்த போதிலும், எவளும் அவனிடமிருந்து ஒரு அன்பான வார்த்தையைக் கேட்டதில்லை. அவனாகவே அவர்களை நாடிச் செல்வான். எவளாவது அவனுடைய இஷ்டத்தைப் புரிந்து கொண்டால், உடனே சொல்வான் :

"இன்றிரவு உன்னோடு தங்கப் போகிறேன்."

அன்று முதல் கொஞ்ச காலத்துக்கு அந்தப் பெண்ணிடமே போய் வந்து கொண்டிருப்பான்; திடீரென்று எந்த விதப் பேச்சு வார்த்தையு மில்லாமல் பிரிந்தும் போய் விடுவான்.

"பிசாசுப் பயல்! அவன் உடம்பு கட்டையால் ஆனதுதான்!" என்று பெண்கள் அவனைப் பற்றிப் பேசிக் கொள்வார்கள்.

அவன் வேலை பார்த்துவந்த விடுதிப் பெண்கள் ஒவ்வொருவரோடும் அவன் வரிசைக் கிரமமாகப் பழகிப்

பார்த்திருக்கிருன்: அக்சின்யாவுடனுந்தான். அவளோடு வாழ்ந்துவரும் காலத்தில்தான் ஒருதடவை அவளைப் பல மாகக் கொடுமைக்கு ஆளாக்கிஞன்.

சோம்பலும் சுகாரோக்கியமும் கொண்டவளாதலால், அவளுக்குத் தூக்கத்தில் பரம பிரீதி. வீட்டில் எவ்வளவு சப்தமிருந்தாலுங்கூட, அவள் அசைவற்றுத் தூங்குவாள். எங்கேனும் மூலையில் போய் உட்கார்ந்து கொண்டு, 'அதிதியை ஆகர்ஷிக்கும்' கண்வெட்டுக் கருமத்தைக் கூட மறந்து போய் விடுவாள். அதிதிகள் வேறு எங்கேனும் கவனம் செலுத்தும் போது, அவளுடைய கண்ணிமைகள் குவிந்து மூடும்; உதடுகள் பிரிந்து, வெள்ளிய பெரும் பற்கள் வெளித்தெரியும். குறட்டையும் வரும். குறட்டைச் சப்தம் கேட்ட மற்றப் பெண்களும் அதிதிகளும் வாய் விட்டுச் சிரிப்பார்கள்; அந்தச் சிரிப்புங்கூட அவளை எழுப்பாது.

இது பல முறை நடந்தது. விடுதித் தலைவி அவளை முகத்தில் அறைந்தும் கண்டித்தாள். எனினும் அவள் தூக்கம் பயந்து ஒதுங்கி விடவில்லை. கொஞ்ச நேரம் அழுவாள்; பிறகு தூங்கிப் போய் விடுவாள்.

கடைசியாய் இந்த விஷயம் வாஸ்காவிடம் வந்து சேர்ந்தது. ஒரு நாள் இரவு அவள் அதிதியின் பக்கத்திலிருந்த சோபாவில் தூங்கி விழுந்து கொண்டிருந்தாள்; அதிதியும் தூங்கி வழிந்து கொண்டிருந்தார். வாஸ்கா உள்ளே சென்று, ஒரு வார்த்தை கூடப் பேசாமல் அவளைக் கையைப் பிடித்து வெளியே இழுத்து வந்தான்.

"நீ என்னை அடிக்கத்தான் போகிருயா?" என்று அக்சின்யா கேட்டாள்.

"அப்படித்தான்" என்ருன் வாஸ்கா.

அவர்கள் சமயலறையை அடைந்ததும், அவன் அவளுடைய ஆடைகளைக் களையச் சொன்ஞன்.

"என்னை அதிகமாய் அடிக்காதே" என்று இரங்கி வேண்டிக் கொண்டாள்.

"ம்...சீக்கிரம்—கழற்று-கழற்று!"

அவள் ரவிக்கை வரையிலும் களைந்து விட்டாள்.

"அதையும் கழற்று" என்று வாஸ்கா உத்தர விட்டான்.

"என்ன படுபோக்கிரித்தனம்!" என்று பெருமூச் செறிந்துகொண்டே, ரவிக்கையையும் கழற்றினாள்.

வாஸ்கா அவளுடைய தோள்பட்டையில் சவுக்கால் அறைந்தான்.

"போ—முற்றத்துக்குப் போ."

"என்ன சொல்கிறாய்?—இது குளிர்காலம். எனக்குக் குளிருமே!"

அவன் அவளைச் சமையல் கட்டிலிருந்து வெளியே தள்ளிக்கொண்டு போனான்; சவுக்கால் கட்டி இழுத்துக் கொண்டு போனான். முற்றத்தில் கிடந்த பனிக் கட்டிக் குவியலின் மேல் அவளை மல்லாந்து படுக்கச் சொன்னான்.

"வாஸ்கா! எப்படி நீ என்னை..."

"படு—போய்ப் படு!"

அவன் அவளைக் கீழே தள்ளி அவள் முகத்தைப் பனிக்குள் புதைத்தான். அவளுடைய கூக்குரல்கூட வெளியே கேட்கவில்லை. பிறகு வெகு நேரம் அவளைச் சவுக்கால் அறைந்துகொண்டே, கத்தினான்.

"இனிமேல் தூங்காதே—தூங்காதே—தூங்காதே..."

அவன் அவளை விடுவித்த பிறகு, அவள் கண்ணீர் சொரிந்துகொண்டு விக்கி விக்கிச் சொன்னாள் : "வாஸ்கா காத்திரு! உனக்கும் காலம் வரும்! நீயும் ஒரு நாள் அழு வாய். கடவுள் ஒருவர் இருக்கிறார், வாஸ்கா"

"பேசு பேசு. இனிமேல் நீ தூங்கு ! உன்னை வெளியே கொண்டு வந்து சவுக்கடியும் கொடுத்து, தண்ணீரையும் மேலே ஊற்றுகிறேன்" என்றான்.

வாழ்க்கைக்கும் அதற்குரிய புத்தி சாதுரியம் உண்டு; அதன் பெயரே 'விபத்து!' சமயங்களில் அது நமக்குப் பரி

சளிக்கிறது. அநேகமாய் நம்மைப் பழிதான் வாங்குகிறது. சூரிய ஒளி ஒவ்வொரு பொருளுக்கும் நிழலையும் கொடுத்து உதவுவது போல், வாழ்க்கையும் ஒவ்வொருவருடைய கருமத்துக்கும் பிரதிபலன் அளிக்கிறது. இது உண்மை, தவிர்க்க முடியாதது. ஒவ்வொருவரும் இதை உணர்ந்தே ஆகவேண்டும்.

வாஸ்காவுக்கும் அந்தப் 'பிற்பகல்' வந்தது!

ஒரு நாள் மாலை சயன அறைக்குள் செல்வதற்குள் அரையாடை அணிந்து, விடுதிப்பெண்கள் உணவருந்திக் கொண்டிருந்தபோது, விடா செர்ஞே கோரோவா என்ற பொறுமையும் உணர்ச்சியும் கொண்ட பெண்ணொருத்தி ஜன்னல் வெளியே எட்டிப் பார்த்துவிட்டுச் சொன்னாள்:

"வாஸ்கா வந்துவிட்டான்"

பல பெண்கள் அதிருப்தி கொண்டனர்.

"பாருங்கள்! அவன் குடித்துவிட்டிருக்கிறான். கூட ஒரு போலீஸ்காரன் வருகிறான்" என்று விடா கத்தினாள்.

எல்லோரும் ஜன்னலுக்கு ஓடினர்.

"அவனை வண்டியிலிருந்தல்லவா இறக்குகிறார்கள்! அவனால் நடக்க முடியாது......தோழிகளே! அவனுக்கு ஏதோ விபத்து நேர்ந்திருக்கிறது!" என்று ஆரவாரத்துடன் சொன்னாள் விடா.

சமையல் கட்டு முழுதும் சாபங்களும் பழிவாங்கும் சிரிப்பொலிகளும் எதிரொலித்தன. ஒவ்வொருத்தியும் விழுந்தடித்து ஓடிவந்து, தமது வீழ்ச்சியுற்ற விரோதியைக் காண விரைந்தனர்.

போலீஸ்காரனும் வண்டிக்காரனும் தாங்கியவாறே உள்ளே வரும் வாஸ்காவைப் பார்த்தனர். அவன் முகம் சாம்பல் பூத்திருந்தது; நெற்றியில் வேர்வைத் துளிகள் துளிர்த்து நின்றன. அவனுடைய இடது காலை இழுத்து இழுத்து வந்தான்.

"வாஸிலி மிரோனிச்! உனக்கு என்ன நேர்ந்துவிட்டது?" என்று விடுதித் தலைவி கேட்டாள்.

வாஸ்கா தலையை ஆட்டிக்கொண்டே கரகரத்த குர லில் சொன்னான் :

"நான் விழுந்து..."

"இவன் ஒரு ட்ராலி வண்டியிலிருந்து விழுந்துவிட் டான்" என்றான் போலீஸ்காரன்.

"விழுந்தான். விழுந்தவுடன் அவன் கால் பைதா வுக்குள் அகப்பட்டுக் கொண்டது! முறிந்தது!—அவ் வளவுதான்."

அந்தப் பெண்கள் அமைதியோடிருந்தாலும், அவர் கள் கண்கள் மட்டும் நெருப்புக்கனல் மாதிரி கனிந்து நின்றன.

அவர்கள் வாஸ்காவைத் தூக்கி மேல் மாடியில் ஒரு அறைக்குக் கொண்டு போய்ப் படுக்க வைத்தார்கள்; டாக் டருக்குச் சொல்லியனுப்பினார்கள். அந்தப் பெண்கள் அவனுடைய படுக்கையைச் சுற்றி நின்று பார்வை பரிமா றினர்; வார்த்தை பரிமாறவில்லை.

"போங்கள் வெளியே" என்று வாஸ்கா சத்த மிட்டான்.

எவளும் அசையவில்லை.

"ஆ! உங்களுக்குச் சந்தோஷமாயிருக்கிறதா?"

"நாங்கள் உனக்காக அழமாட்டோம்" என்று விடா சிலுப்பிக்கொண்டே சொன்னாள்.

"அம்மா, இவர்களை வெளியே விரட்டு...இவர்கள் எதற்காக இங்கு வரவேண்டும்?"

"பயமாயிருக்கிறதா?" என்று அவன் மீது குனிந்து கொண்டு கேட்டாள் விடா.

"போங்கள்—கீழே போங்கள்" என்று தலைவி ஆணை யிட்டாள்.

அவர்கள் சென்றனர். போகும்போது ஒவ்வொருத்தி யும் அவனைப் பார்த்தாள். விடா மட்டும் மெல்லச் சொன்னாள் :

"நாங்கள் திரும்பவும் வருவோம்."

அக்சின்யா முஷ்டியை உயர்த்தி அவனைப் பயமுறுத்திக்கொண்டே சொன்னுள் "பிசாசுப் பயலே!...நொண்டியானுயா! வேணும் உனக்கு!"

அவளுடைய துணிச்சல் பிற பெண்களைப் பிரமிக்கச் செய்தது. கீழே சென்ற அந்தப் பெண்களின் உள்ளத்தில் இதற்கு முன் அனுபவித்திராத ஆனந்தமான இனிமையும், பழி வாங்கியதனுல் ஏற்பட்ட பெருமிதமும் நிரம்பித் ததும்பின. ஆனந்தப் பைத்தியத்தில் வாஸ்காவைக் கேலி செய்வதும் விடுதித் தலைவியை விறைத்துப் பார்ப்பதும் புண் படுத்துவதுமாக இருந்தனர், அவர்கள்.

விடுதித் தலைவியுங்கூட வாஸ்கா விதியின் வலிமையால் தண்டிக்கப்பெற்றதற்காகச் சந்தோஷப்பட்டாள். தான் அவளிடம் வேலை பார்ப்பவன் என்பதை வாஸ்கா மறந்து, 'தானே உயர்ந்தவன், தனக்குத் தாழ்ந்தவளே அவள்' என்ற மனப்பான்மையோடு பழகி வந்ததால், அவள் அவனுக்கு அடங்கி நடந்து வரவேண்டியிருந்தது. ஆனுல், அவனுடைய உதவியின்றி அந்தப் பெண்களைக் கட்டி மேய்க்க முடியாதென்பதை அவள் உணர்ந்ததனுல் வாஸ்காவைப் பற்றிய தன் மன உணர்ச்சிகளை வெளியிடாதிருந்தாள்.

டாக்டர் வந்தார்; நோயாளிக்குக் கட்டுக் கட்டினுர். மருந்தெழுதிக் கொடுத்தார். பிறகு, வாஸ்காவை ஆஸ்பத்திரிக்கு அனுப்பி வைப்பதுதான் உசிதம் என்று தலைவியிடம் கூறிவிட்டுப் போய்விட்டார்.

"நல்லது தோழிகளே. நமது அருமை நோயாளியை இன்னொரு தரம் போய்ப் பார்க்கலாமா?" என்று துணிச்சல் நிறைந்த குரலில் கேட்டாள் விடா.

அவர்கள் அனைவரும் கூச்சலுடனும், கும்மாளியுடனும் மாடிக்கு விரைந்தனர்.

வாஸ்கா கண்களை மூடிக் கிடந்தான்; கண்களைத் திறக்காமலேயே, அவன் சொன்னுன்: "திரும்பவும் வந்துவிட்டீர்களா?"

"வாஸிலி மிரோனிச்! உன் நிலைக்காக, நாங்கள் வருந்தாமலா இருக்கிறோம்?"

"உன்னை நாங்கள் விரும்பவில்லையா?..."

"நினைத்துப் பார் நீ எப்படி......"

அவர்கள் அவனுடைய படுக்கையைச் சுற்றி நின்று, குதூகலமும் குரோதமும் நிறைந்த கண்களுடன் அவனுடைய முகத்தைப் பார்த்தனர்; அமைதியும் அழுத்தமுங் கொண்ட குரலில் பேசிக் கொண்டனர். அவனும் அவர்களைப் பார்த்தான். எனினும் அந்தக் கண்களில் என்றுமில்லாத அதிருப்தி நிறைந்த பசி, தீர்க்க முடியாத பசி கனன்று எரிந்து கொண்டிருந்தது.

"ஏ, பெண்களே!......நான் குணமாகிவிடுவேன்...... அதன்பின்..."

"ஐயோ!—கடவுள் நல்லாயிருக்கணும். நீ குணமாகவே போவதில்லை" என்று லிடா குறுக்கே பேசினாள்.

வாஸ்கா தனது உதடுகளைக் கடித்து, பொறுமையைக் காப்பாற்றினான்.

"என் அன்பே! எந்தக் கால் வலிக்கிறது?" என்று ஒரு பெண் அவன் மீது குனிந்து கொண்டே கேட்டாள். அவள் முகம் வெளுத்திருந்தது; பற்களும் வெளியே தெரிந்தன: "இந்தக் கால்தானா?"

உடனே வாஸ்காவின் ஊனமுற்ற காலைப்பற்றி விறிட்டென்று இழுத்தாள், அவள்.

வாஸ்கா பற்களை நெரித்துக் கூச்சலிட்டான். அவனுடைய இடது கையும் ஊனமானதால், தனது வலது கையால் அந்தப் பெண்ணை அடிக்க முயன்று, தன் வயிற்றிலேயே அடித்துக் கொண்டான். உடனே அவனைச் சுற்றிச் சிரிப்புக் கலகலத்தது.

"சிரிப்பா? பாருங்கள், உங்களை நான் கொன்று விடுவேன்" என்று சத்தமிட்டு, தனது கண்களைப் பயங்கரமாய்ச் சுழற்றினான்.

ஆனல் அவர்களோ அவனுடைய படுக்கையைச் சுற்றி நடமாடினர்; அவனைக் கிள்ளினர்; தலைமயிரைப் பிடித்து இழுத்தனர்; முகத்தில் காரியுமிழ்ந்தனர்; அவனுடைய சேதமுற்ற காலைப்பற்றி வெட்டி யிழுத்தனர். அவர் கள் கண்கள் கனன்றன அவர்கள் வாய்விட்டுச் சிரித்தனர்; வசைமாரி பொழிந்தனர்; நாய்களைப்போல ஊளையிட்டனர். அவர்களுடைய கேலிக்கூத்து வார்த்தைக் கடங்காத கசப்பும் கடுமையுங் கொண்டதாயிருந்தது. அவர்கள் வஞ்சின வெறி அத்துமீறிப் போன, மயக்க நிலையில் இருந்தனர்.

அரையுடை உடுத்தி அவர்கள் போடும் அந்தக் கும்மாளி பயங்கரமாக இருந்தது.

வாஸ்கா வலது கையை ஆட்டியவாறே கூச்சலிட்டான்; விடுதித் தலைவி வாசல் நடையில் வந்து நின்று கடூரமாக அதட்டினாள்:

"போதும் போதும். விடுங்கள் அவனை! அல்லது நான் போலீஸைக் கூப்பிடுவேன்......நீங்கள் அவனைக் கொன்று விடுவீர்கள்!......என் அன்பே......என்......"

ஆனல் அவர்கள் அவள் சொல்லுக்குச் செவிசாய்க்க வில்லை. அவனே அவர்களை வருஷக் கணக்காகச் சித்திர வதை செய்திருக்கிறான்! அதற்குப் பதிலுக்குப் பதில் செய்ய, அவர்களுக்கு நில நிமிஷ காலந்தான் இருக்கிறது! ஆக-வ அவர்கள் ஆத்திரத்துடன் இருந்தனர்......

திடீரென அந்தக் கும்மாளியையும் கூத்தையும் ஊடுருவி, உச்சஸ்தாயியில் ஒரு குரல் எழுந்தது.

"தோழிகளே! போதும். அவன் மீது கருணை கொள்ளுங்கள். அவனும்—அவனுங்கூட வேதனைப்படுகிறான்! எனது அருமைத் தோழிகளே! கிறிஸ்துவின் நாமத்துக் காகவேனும்...எனது அருமை..."

இந்தக் குரல் அந்தப் பெண்களைச் சில்லிடச் செய்தது; பயந்து போய் வாஸ்காவை விட்டு ஒதுங்கிச் சென்றனர்.

அக்சின்யாதான் அப்படிப் பேசினாள். ஜன்னலருகே நடுங்கி நின்று, அந்தப் பெண் தன் தலையைத் தாழ்த்தி வணங்கி, வயிற்றைப் பிசைந்து கேட்டுக்கொண்டாள்.

வாஸ்கா அசைவற்றுக் கிடந்தான். அவனுடைய சட்டை மார்பின் பக்கம் கிழிந்திருந்தது; அவனுடைய அகன்ற மார்பின் மேல் படர்ந்த செம்மயிர்ப் புதருக்குக் கீழே ஏதோ ஒன்று முண்டியடித்துத் தப்பிக்க முயல்வது போன்று துடித்துக் கொண்டிருந்தது. அவனுடைய தொண்டைக் குழியில் கரகரப்பு எழுந்தது; கண்கள் மூடிக் கிடந்தன.

அந்தப் பெண்களெல்லாம் வாசல் நடையில் ஒன்றாகக் குழுமி நின்று அக்சின்யாவின் முனகலையும் வாஸ்காவின் கரகரப்பையும் காது கொடுத்துக் கேட்டனர். விடா அவர்களுக்கு முன்னால் நின்றுகொண்டு, தனது விரல்களில் சுற்றியிருந்த செம்பட்டை மயிர்களை விலக்கிக் கொண்டிருந்தாள்.

"அவன் செத்துப் போனால்!..." என்று எவளோ பேசினாள். பிறகு ஒரே மௌனம்.

ஒவ்வொருத்தியாக வாய் பேசாது வாஸ்காவின் அறையை விட்டு அமைதியாகக் கீழே இறங்கினர்; அவர்கள் சென்றவுடன் அறையில் கிழிபட்ட துணிகளும் ரோமங்களும் தான் தரையில் கிடந்தன.

அக்சின்யா அங்கேயே தங்கிவிட்டாள்.

பெருமூச்சு விட்டுக் கொண்டே அவள் வாஸ்காவை நெருங்கி, தனது ஆழ்ந்த குரலில் கேட்டாள்:

"என்னால் உனக்கு என்ன ஆகவேண்டும்?"

அவன் கண்களைத் திறந்து அவளைப் பார்த்தான்; ஆனால் பேசவில்லை.

"நீ பேசலாம், உன்னைச் சுத்தப்படுத்த வேண்டுமா? நான் சுத்தப்படுத்துகிறேன். குடிக்கத் தண்ணீர் வேண்டுமா? தருகிறேன்."

வாஸ்கா அமைதியுடன் தலையை ஆட்டினான்; உதடுகளை அசைத்தான். வாய் பேசவில்லை.

"இப்படியா ஆச்சு! உன்னுல் பேசக்கூட முடியாதா?" என்று அக்சின்யா தனது ஜடையைக் கழுத்தைச் சுற்றிப் போட்டவாறே கேட்டாள். நாங்கள் உன்னிடம் படுமோசமாய் நடந்து கொண்டோம். அது உன்னைத் துன்புறுத்துகிறதா, வாஸ்கா! அமைதியாயிரு. எல்லாம் சரியாய்விடும். முதலில்தான் வேதனை இருக்கும்."

"...எனக்குத் தெரியும்"

அவனுடைய முகத்தில் சதை திரண்டு அசைந்தது, அவன் கரகரத்துச் சொன்னுன்:

"......தண்ணீர்..."

திருப்தியற்ற பசி அவன் கண்களிலிருந்து மறைந்தது.

அக்சின்யா வாஸ்காவுடன் மாடியிலேயே தங்கி விட்டாள். சாப்பிடவோ, டீ குடிக்கவோ, நோயாளிக்குச் சாமான் ஏதேனும் எடுக்கவோதான் கீழிறங்கி வருவாள். மற்றப் பெண்கள் அவளிடம் பேசவும் இல்லை; எதுவும் கேட்கவும் இல்லை; விடுதித் தலைவியும் அவள் வாஸ்காருக்கு 'பண்டுவம்' பார்ப்பதைத் தடை செய்யாதது மட்டுமல்லாமல் அதிதிகளுக்கு அவளை விருந்தளிக்கவும் இல்லை. அக்சின்யா வாஸ்காவின் அறைச் சன்னலில் உட்கார்ந்து, பனிபடிந்த வீடுகளையும், மூடுபனி உறைந்த மரங்களையும் வானேக்கி எழும்பும் பனிமேகக் கூட்டங்களையும் பார்த்துக் கொண்டிருப்பாள். அதில் சலித்து அலுத்துப் போகும்போது நாற்காலியில் அமர்ந்தவாறே மேஜை மீது குப்புற விழுந்து தூங்கிப் போவாள். இரவு நேரங்களில் வாஸ்காவின் படுக்கையருகே தரையில் விழுந்து கிடந்து உறங்குவாள்.

அவர்கள் இருவருக்கிடையேயும் அநேகமாய்ப் பேச்சு வார்த்தையே இருக்காது. வாஸ்கா தண்ணீரேனும், வேறு ஏதேனும் கேட்டால், அவள் அதைச் கொண்டு வந்து கொடுப்பாள்; அவனை நோக்கிப் பெருமூச் செறிவாள்; ஜன்னலைப் பார்த்துப் போய்விடுவாள்.

நாலு நாட்கள் கழிந்தன. விடுதித் தலைவி வாஸ்காவை ஆஸ்பத்திரிக்கு அனுப்பிவிட வேண்டும் என்று அரும்பாடுபட்டாள்; எனினும் ஆஸ்பத்திரியில் அந்தச் சமயம் கட்டில் காலியில்லை.

ஒரு நாள் மாலை இருள் சூழும் நேரத்தில் வாஸ்கா தலையை உயர்த்திக் கேட்டான்: "அக்சின்யா, நீ அங்கேயா இருக்கிறாய்?"

அவள் தூங்கி வழிந்து கொண்டிருந்த போதிலும், அந்தக் கேள்வி அவளை எழுப்பி விட்டது.

"பின் நான் எங்கே யிருக்க வேண்டும்?" என்று கேட்டாள்.

"இங்கே வா."

அவள் அவனுடைய படுக்கையருகே சென்று, வழக்கம் போல், தனது ஜடையைக் கழுத்தைச் சுற்றிப் போட்டுக் கை விரலால் தாங்கி நின்றாள்.

"உனக்கு என்ன வேணும்?"

"ஒரு நாற்காலியை எடுத்துப் போட்டு, இப்படி உட்கார்"

பெருமூச்சுடன் அவள் ஜன்னலருகே சென்று அங்கு கிடந்த நாற்காலியை எடுத்து வந்து போட்டு உட்கார்ந்தாள்.

"சரிதானா?"

"ஒன்றுமில்லை......நான்......கொஞ்சம் இங்கேயே இரேன்"

சுவரில் வாஸ்காவின் வெள்ளிக் கடிகாரம் டிக்டிக் கென்று ஒலித்துக் கொண்டிருந்தது. வெளியில் ஒரு பனிப் பாதை வண்டி நழுவி ஓடுவதும், அதிலுள்ளவர்கள் சத்த மிடுவதும் கேட்டது. கீழ் வீட்டில் பெண்கள் சிரிப்பதும், யாரோ ஒருத்தி உச்சஸ்தாயியில் உரக்கப் பாடுவதும் கேட்டன:

"மாணவன் ஒருவன்—என்
மனசைக் கொள்ளை கொண்டான்......"

"அக்சின்யா!" என்றான் வாஸ்கா.

"என்ன?"

"இங்கே பார்...நாமிருவரும் ஒன்றாக வாழலாம்"

"இப்போது மட்டும் வாழவில்லையா?" என்று அவள் அமைதியாகக் கேட்டாள்.

"இல்லை யில்லை. பொறு. நாம் ஒழுங்கான முறையிலேயே வாழ்வோம்."

"ரொம்ப சரி" என்றாள் அவள்.

"நல்லது"

அவன் மீண்டும் மௌனியானான். கண்களை மூடி அப்படியே கிடந்தான். பிறகு, "ஆமாம்...நாம் இங்கிருந்து கிளம்பிச் சென்று, புது வாழ்வு நடத்தலாம்."

"எங்கே போவது?" என்றாள் அக்சின்யா.

"எங்கேயாவது? அந்த ட்ராலி வண்டிக் கம்பெனி மீது நான் இந்த விபத்துக்காகக் கேஸ் போடுவேன். அவர்கள் எனக்கு நஷ்ட ஈடு தரவேண்டும். அதுதான் சட்டம். மேலும், என்னிடம் கைவசம் அறுநூறு ரூபிள்களுக்குமேல் இருக்கின்றது."

"எவ்வளவு?"

"அறுநூறு ரூபிள்களுக்கு மேல்"

"சரி, சொல்லாதே" என்று சொல்லி விட்டு, அவள் கொட்டாவி விட்டாள்.

"ஆமாம். அந்தப் பணத்தைக் கொண்டு, ஒரு வீடு கட்டலாம். கம்பெனியிலிருந்தும் கொஞ்சம் பணம் கிடைக்கும். நாம் சிம்பர்ஸ்க்காவது சமாராவுக்காவது போய் விடுவோம். அங்கு அந்த ஊரிலேயே சிறந்த இடமாக வீடு அமைப்போம். நல்ல பெண்களைத் தருவிப்போம். நபருக்கு ஐந்து ரூபிள் என ரேட்டு விதிப்போம்"

"என்னமாய்ப் பேசுகிறாய்?" அக்சின்யா புன்னகை புரிந்தாள்.

"ஏன்? அப்படித்தான் இருக்க முடியும்!"

"உண்மையாகவா?"

"ஆமாம் அப்படித்தான். நீ விரும்பினால், நாமிருவரும் கல்யாணம் பண்ணிக் கொள்ளலாம்."

"என்...ன?" அசட்டுத்தனமாய் விழித்துக்கொண்டே கேட்டாள் அக்சின்யா.

"நாம் மணம் புரிந்து கொள்வோம்" என்று உணர்ச்சியுடன் சொன்னான், வாஸ்கா.

"நீயும் நானுமா?"

"ஆமாம்."

அக்சின்யா வாய்விட்டுச் சிரித்தாள். தனது நாற்காலியில் மேலும் கீழும் ஆடிச்சிரித்துக் கொண்டு, தனது வயிற்றைப் பிடித்துக் கொண்டு மெதுவாகச் சிரித்தாள்; அது அவளிடம் அசாதாரணமாகத் தோன்றிய சிரிப்பு.

"உனக்கு என்ன நேர்ந்து விட்டது?" என்று வாஸ்கா கேட்டான். மீண்டும் அந்தப் பசி அவன் கண்களில் குடி கொண்டது. அவள் சிரித்துக் கொண்டே இருந்தாள்.

"என்ன விஷயம்?" என்று அவன் மீண்டும் கேட்டான்.

முடிவாக, அவள் தனது கூச்சலுக்கும் சிரிப்புக்கும் இடையே எப்படியோ சொல்ல ஆரம்பித்தாள்:

"எல்லாம் கல்யாணத்தைப் பற்றித்தான், அது நம்மிருவருக்கும் ஒத்து வருமா, என்ன? நான் தேவாலயத்துக்குச் சென்றே வருஷம் மூன்றுக்கு மேலாகிறதே! என்ன விபரீத ஆசாமியப்பா, நீ! நானா,-உன் மனைவி?... உன்னைக் கட்டிக் கொண்டு, உனக்குப் பிள்ளைகளும் பெற்றுத் தரவேண்டுமென்றா எதிர்பார்க்கிறாய்!... ஹா, ஹா."

குழந்தைகளைப் பற்றிய எண்ணம் அவள் மனத்தில் மீண்டும் புதுச் சிரிப்பலையை உண்டாக்கி விட்டது. வாஸ்கா மௌனமாக அவளைப் பார்த்துக் கொண்டிருந்தான்.

"நான் உன்னோடு எங்கேயும் வந்துவிடுவேன் என்று எண்ணுகிறாய்? என்ன யோசனை! நீ எங்கேயும் கொண்டு போய், உன் இஷ்டப்படி நடத்துவாய். உன்னுடைய சித்திரவதையைப் பற்றித்தான் எல்லோருக்கும் தெரியுமே!"

"சே! சத்தம் போடாதே!" என்றான் வாஸ்கா.

அவளோ அவனுடைய கொடுமையைப் பற்றி, பற்பல சம்பவங்களை நினைவுக்கிழுத்தவாறே அளந்து கொட்டினாள்.

"அமைதியாய் இரேன்" என்று அவன் வேண்டினான். அவள் அதற்குப் பணியாததைக் கண்டு உரக்கச் சத்தமிட்டான். "நான் சொல்கிறேன். அமைதியாயிரு!"

அன்று மாலை அவர்கள் இருவரும் வேறொன்றும் பேசிக் கொள்ளவில்லை. இரவில் வாஸ்காவுக்கு ஜன்னி கண்டது. அவனுடைய மார்புக்குள்ளிருந்து துரத்தலும், கரகரப்பும் வந்தது. அவன் பற்களைக் கடித்தான். வலது கையை ஆட்டினான். தனது நெஞ்சிலேயே அறைந்து கொண்டான்.

"உனக்கு என்ன செய்கிறது? இந்த அறையில் உனக்குத் திகை முட்டுகிறதா? அல்லது......"

"ஒன்றுமில்லை. கனவுகண்டேன்..." என்று மெதுவாகச் சொன்னான் வாஸ்கா.

"எனக்குக் கொஞ்சம் தண்ணீர் கொடு."

தண்ணீர் குடித்து முடிந்ததும், அவன் தலையை ஆட்டிக்கொண்டே சொன்னான்:

"இல்லை...நான் ஒரு வீடு வாங்கப் போவதில்லை. ஒரு கடைதான் வைப்பேன்...அதுதான் நல்லது...வீடு எனக்கு வேண்டாம்!"

"கடையா?...கடையென்ருல், ரொம்ப நல்லதாச்சே!" என்ருள் அக்சின்யா.

"என்னோடு நீ வருவாயா? வருவாயா?" என்று ஆத்திரத்துடன் கேட்டான் வாஸ்கா.

"அதைத்தானே கேட்கிருய்?" என்று படுக்கையில் புரண்டவாறே கேட்டாள் அக்சின்யா.

"அக்சின்யா" என்று தெளிந்த குரலில் தலையணையை விட்டுத் தலையை உயர்த்திக் கொண்டே சொன்னன் வாஸ்கா: "சத்தியமாய்......"

அவன் கையைக் காற்றில் அசைத்தவாறே, மௌனியானன். "உன்னோடு நான் எங்கேயும் வரமாட்டேன்" என்று தீர்மானமான குரலில் கூறினள் அக்சின்யா. ஒரு கணம் கழித்து மீண்டும், "எங்கேயும் வரமாட்டேன்" என்று அழுத்திக் கூறினள்.

"நான் உன்னை விரும்பினல்—நீ?" என்று வாஸ்கா கேட்டான்.

"நான் எங்கேயும் வரப் போவதில்லை!"

"நான் அதைச் சொல்லவில்லை, நான் போகச் சொன்னல், போய்விடுவாயல்லவா?"

"அதுவும் முடியாது"

"நாசமாப் போக!" அவன் எரிச்சலுடன் சத்தமிட்டான். "இங்கு வந்து எனக்குப் பணிவிடைகள் செய்கிருய்! பராமரிக்கிருய்! அப்படியானல், நான் விரும்புவது போல நீ ஏன் செய்யக்கூடாது?"

"அது வேறு விஷயம். உன்னோடு வாழ்வதென்ருல்—அது—உன்னைக் கண்டாலே எனக்குப் பயமாயிருக்கிறது. நீ ஒரு துஷ்டன்!"

வாஸ்கா கசந்து பதிலளித்தான்: "உனக்கு அதைப் பற்றி என்ன தெரியும்? 'துஷ்டன்!' நீ ஒரு முட்டாள்! துஷ்டனென்று சொல்கிருய்? தீமை இழைப்பதென்பது அத்தனை லேசானது என்று நினைக்கிருய்?"

பேச்சு முறிந்தது; அவன் தனது கையால் நெஞ்சைத் தடவிக் கொடுத்தான். பிறகு குரலிலே ஆவலும், கண் களிலே பயமும் தோன்ற மீண்டும் பேச ஆரம்பித்தான்:

"நீ அதைப் பிரமாதப் படுத்துகிறாய். தீமை!—அது ஒன்றுதானா உன்னுடைய குற்றச்சாட்டு? ஆ! என்னிட மிருந்து அவர்கள் வேறு எதைத்தான் விரும்பினார்கள்? அக்சின்யா என்னோடு வரமாட்டாயா?"

"மீண்டும் அதைப்பற்றி வாய் பேசாதே. என்னால் முடியாது" என்று அக்சின்யா திடமாகச் சொல்லிவிட்டு, சந்தேக நோக்குடன் அவனை விட்டு விலகினாள்.

அவர்கள் பேச்சு மீண்டும் நின்றது. சந்திர ஒளி அறைக்குள் பிரகாசித்தது; அதன் ஒளியில் வாஸ்காவின் முகம் பசந்து போயிருந்தது. வெகுநேரம் அவன் கண் களைத் திறந்தவாறே கிடந்துவிட்டு, மீண்டும் கண் களை மூடினான். கீழ் வீட்டிலோ கூத்து, கும்மாளம், பாட்டுக்கள்!...

அக்சின்யா குறட்டைவிட ஆரம்பித்து விட்டாள்; வாஸ்கா ஆழ்ந்த பெருமூச்சு விட்டான்.

இரண்டு நாட்கள் கழிந்தன. விடுதித் தலைவி ஆஸ் பத்திரியில் வாஸ்காவுக்கு இடந்தேடி விட்டாள்.

ஒரு ஆம்புலன்ஸ் காரில் உதவி டாக்டரும், ஆஸ்பத் திரிச் சேவகனும் வந்தார்கள். அவனை மெதுவாக, கீழ் வீட்டுக்கு இறக்கி, சமையலறைப் பக்கம் கொண்டு வந்த தினர். அங்கு எல்லாப் பெண்களும் வாசல் நடையில் குழுமி நிற்பதை அவன் கண்டான். அவனுடைய முகம் சுருங் கிற்று; எதுவும் பேசவில்லை. அவர்கள் அவனை ஆர்வத்துட னும் அமைதியுடனும் கூர்ந்து நோக்கினர். அந்தப் பார்வை யிலிருந்து எதுவுமே தெரிந்துகொள்ள முடியவில்லை. அக்சின்யாவும் விடுதித் தலைவியும் அவனுக்குக் கோட்டை மாட்டி விட்டார்கள். சமையல் கட்டில் பரிபூரண சவ அமைதி நிலவிற்று.

"வருகிறேன்" என்று எல்லாப் பெண்களுக்கும் தலை தாழ்த்திச் சொன்னான் வாஸ்கா: "வருகிறேன்..."

சிலர் அமைதியாகத் தலையாட்டினர்; அவன் எதையும் கவனிக்கவில்லை.

லிடா அமைதியுடன் சொன்னாள்: "குட்பைவாஸ்கா!"

"குட்பை...ஆம்..."

உதவி டாக்டரும் சேவகனும் அவனுடைய கட்கத்துள் கை கொடுத்துத் தாங்கித் தூக்கி வாசலுக்குக் கொண்டு போனார்கள். அவன் மீண்டும் அந்தப் பெண்களிடம் திரும்பிச் சொன்னான்:

"வருகிறேன். நான் உங்களிடம் நடந்து கொண்டது... அது வாஸ்தவந்தான்..."

"குட்பை—வாஸிலி!" என்று இரண்டு மூன்று குரல்கள் பதிலளித்தன.

"என்ன பிரயோசனம்!" அவன் தலையை ஆட்டினான்; முகத்தில் அவனிடம் இதற்குமுன் கண்டறியாத ஓர் புது உணர்ச்சி தோன்றியது. "என்னை மன்னித்து விடுங்கள். கிறிஸ்துவுக்காகவேனும், என்னை மன்னியுங்கள். என்னால் யார் யார்...யாரெல்லாம்..."

"ஐயோ! அவர்கள் அவனைக் கொண்டு போகிறார்களே; என் அன்பைக் கொண்டு போகிறார்களே!" என்று அக்சின்யா கதறிக் கொண்டு பெஞ்சு மீது விழுந்தாள்.

வாஸ்கா குரல் கேட்டு விட்டு, தலையை நிமிர்த்தினான். அவன் கண்கள் பயங்கரமாய் ஜொலித்தன. அவன் அவளுடைய பிரலாபத்தை முழுதுங் கேட்டு விட்டு, நடுங்கும் உதடுகளால் அமைதியுடன் சொன்னான்!

"சீ! என்ன முட்டாளாயிருக்கிறாய்? ஏன் இந்தப் படபடப்பு?"

"சரிசரி. புறப்படு" என்று உதவி டாக்டர் முகத்தைச் சுழித்துக்கொண்டே சொன்னார்.

"வருகிறேன், அக்சின்யா! உன்னை நான் ஆஸ்பத்திரியில் எதிர்நோக்கிக் கொண்டிருப்பேன்!" என்று சத்தமிட்டுச் சொன்னான் வாஸ்கா.

அக்சின்யா மீண்டும் கதறினாள்:

"ஐயோ! எனக்கு...இனி...யார்...ஆறுதல்?"

அந்தப் பெண்களெல்லாம் அவள் பக்கம் திரும்பி கண்ணீர் பொழியும் அவள் முகத்தை நோக்கினார்கள்.

விடா அவளைக் குனிந்து பார்த்து, திடமான குரலில் சொன்னாள்:

"சூஸ்க்கா! நீ ஏன் கதறுகிறாய்? அவன் இறந்து போக வில்லையே! நீ அவனைப் போய்ப் பார்க்கலாம்......நாளையே வேண்டுமானாலும் போகலாம்!"



# சங்கீதம்

நான் அந்தப் போலீஸ் படையின் அதிகாரியின் தனியறையில் உட்கார்ந்திருந்தேன்; அது ஒரு சின்ன அறை; ஒளியும் களையும் அற்ற அறை. அந்த அறையில் ஒரு அகலமான எழுத்து வேலைக்கான மேஜை, கரியதோல் பிடி போட்ட மூன்று நாற்காலிகள், ஒரு சோபா, ஒரு பெரிய அரங்கு பீரோ முதலியன இருந்தன. அந்த அறையிலே தொங்கிக் கொண்டிருந்த அமிதமான புகைப்படங்களின் தொகையால், அந்த அறையின் களையின்மை அதிகப்பட்டுத் தோன்றியது.

அந்தப் படங்கள் ஏராளம். போலீஸ் படைகள், பெண்கள், பிள்ளைகள், ஏதோ ஒரு ராணுவ முகாமின் படம், ஒரு செங்குத்தான நதிக்கரையில் அமைந்துள்ள ஒரு நகரம் (எனக்குத் தெரியாதது), ஒரு இளம் ராணுவ மாணவன் கடிவாளத்தைப் பிடித்தவாறு நிற்கும் ஒரு வெள்ளைக் குதிரை, ஊசியிலைக் காட்டில் கோணல் மாணலாக நிற்கும் ஒரு கற்சிலையைப்போல் உள்ள ஒரு பாதிரியின் முழு உருவப் படம்—இத்தியாதி.

அந்த அதிகாரி உயரமானவர்; திரண்டு உருண்ட புஜங்களை உடையவர். அவர் ஒரு காக்கி நிறச் சட்டை அணிந்திருந்தார். அவரது முகம் தெளிவாகவும் தேய்ந்து மெலிந்ததாகவும் இருந்தது. அவரது பழுப்பும் நீலமும் கலந்த கண்கள் பெரிதாகவும் அழகாகவும் இருந்தன. எனினும் அவற்றின் பார்வையில் களைப்பும் சோர்வும் சோகமும் பிரதிபலித்தது. அவருக்கு வயது ஒன்றும் நாற்பதுக்கு மேலிருக்காது. எனினும் அவரது தாடி பழுத்து நிற மாறிவிட்டது. அலைபோற் சுருண்ட அவரது தலைமயிர் மெல்லியதாக இருந்தது. அவரது இடது கன்னத்தின் பக்கம் அடிக்கடி ஒரு நரம்பு வலித்து இழுத்துக் கொள்வதால், அவர் அடிக்கடி கண்களை இமை தட்டி விழித்தார்.

அவர் தமது சட்டைப் பைகளுக்குள் கைகளைப் புகுத்தியவாறே தமது நெடிய கால்களை அகட்டி மெதுவாக நடந்து மேஜையின் அருகே வந்தார்; வந்து சோர்ந்து போன குரலில் பேசினர்:

"அதை நீ எப்படி விளக்கப் போகிருய்? எப்படியும் அதை விளக்கியாக வேண்டும்."

அந்த அறையில் இரண்டு ஜன்னல்கள் இருந்தன. அதில் கறுஞ் சிவப்பான திரைகள் தொங்கவிடப்பட்டிருந்தன; எனக்கும் அந்த அதிகாரிக்கும் இடையில் தோல் நாற்றமும் மருந்து வாடையும் காரப் புகையிலை நெடியும் நிறைந்த சிவந்த புகை மண்டலம் நிரம்பி நின்றது.

என்னைச் சிறையிலிருந்து, குதூகலம் கும்மாளியிடும் நகரத்து வீதி வழியாகக் காவலாளி அழைத்து வந்தபோது, நான் ஒரு வீரன் எனவே உணர்ந்தேன். வாழ்க்கையின் அநீதியைப் பற்றிய நினைவோட்டங்கள் என் இதயத்தில் வாலிபத்தின் கோப வசீகரத்தைத்தான் தூண்டி விட்டன. எனவே எனது விசாரணையை நான் தன்னந் தனியான விறல் வீரனைப் போலவே எதிர்நோக்கி வந்தேன்.

ஆரம்பத்தில் நான் அந்த அதிகாரியின் கேள்விகளுக்கு வேகத்தோடும் முரட்டுத்தனமாகவுமே பதில் சொன்னேன். அந்த அதிகாரியைக் கோபமுறத் தூண்ட வேண்டும், அவன் என்னைப் பார்த்துக் கூச்சலிட்டுக் கத்த வேண்டும், பயமுறுத்த வேண்டும். அதன் மூலம் அந்தத் துராத்ம விரோதியுடன் ஒரு போர் தொடுக்க வேண்டும் என்று தான் விரும்பினேன். ஆனல் நான் அவரது மெழுகு போன்ற முகத்தையும், சோகம் ததும்பும் கண்களையும் பார்த்தவுடன், அவரது அடைந்த குரலையும், ஒரு தலைப்பட்சக் கேள்விகளையும் காது கொடுத்துக் கேட்டேன்; என் இதய நெருப்பு அவிந்து விட்டது; என் உத்வேகம் மறைந்து விட்டது. என் இதயத்தில் புழுக்கமும் பாரமும் எரிச்சலும் குடிபுகுவது போல உணர ஆரம்பித்தேன்.

என் முன் எதிரி எவனுமில்லை; இந்த எச்சுப்போன மனிதனிடம் எந்தத் துன்மார்க்கமும் தென்படவில்லை. இதுபோன்ற ஒரு நன்னாளில் அவரைப் போன்ற ஆசாமி ஊரைவிட்டு வெளிச்சென்று காட்டுப் புறத்தில் இளம் பசிய புல் தரையில் மல்லாந்து படுத்து வானை நோக்கிக் களிப்புறத்தான் வேண்டும்; ஆனால் இவரோ இந்த அறைக்குள்ளே கிடந்து புழுங்கி, தமது காலத்தை என்னோடு வீணாக்கிக்கொண்டு, திரும்பத் திரும்பக் கேட்ட கேள்விகளையே கேட்டுச் சலிப்புறச் செய்து கொண்டிருந்தார்.

"நீ ஏன் யாரோஸ்லாவுக்குப் போனாய்?"

"அதைத்தான் சொன்னேனே"

"நீ சொல்வதை நம்பமுடியாது" என்று பதிலளித்தார்; தனது சிகரெட் சாம்பலை உதறித் தட்டினார்; அவரது கால் செருப்புக்களை மீண்டும் தரையோடு தட்டித் தாளமிட்டுக் கொண்டார்.

அவர் தம்மைச் சுற்றியுள்ள பொருள்கள் அனைத்தையும் ஏதோ ஒரு அதிசயக் கண்ணோட்டத்தோடு பார்த்தார்; அந்த அறையிலுள்ள சாமான்கள் எல்லாம் அவருக்கே புதிதானவையா யிருப்பதுபோல அவர் பார்த்தார்; அந்தச் சாமான்கள் தமக்குப் பிடிக்காதது போலவும் தமக்குத் தேவையானவை அங்கு இல்லாதது போலவும் கருதும் ஒரு பாவம் அந்தப் பார்வையில் தென்பட்டது. சமயங்களில் எதுவுமே பேசாமல் தலையை மட்டும் பலமாக ஆட்டிக் கொண்டார். அப்படி ஆட்டும்போது அவரது இளந்தாடி விசிறியைப்போல் அசைந்தாடி மார்பின் மீது வீசிக்கொண்டது. கலைக்கப்பட்ட தன் கூட்டைச் சுற்றிச் சுற்றிப் பறக்கும் ஒரு ஊசி இலைக்காட்டுப் பறவையைப்போல அவர் தோற்றமளித்தார்.

என் வாழ்க்கையிலேயே இந்த மாதிரி ஆசாமியை நான் இப்போதுதான் சந்தித்தேன்; அதை நினைத்தால்... அவரைப் போன்ற ஆசாமி இந்த உலகத்திலேயே அவர் ஒரே ஒருவர்தான் இருக்க முடியும் என்று எனக்குப் பட்டது.

"கேள்!" என்று அவர் அசையாது நின்றுகொண்டு தம் பாக்கெட் கடிகாரத்தைக் கையில் எடுத்துக் கொண்டே சொன்னார்: "எவ்வளவு நேரந்தான் இப்படியே போய்க் கொண்டிருப்பது? இந்த முடிவற்ற விசாரணைக்கு நாம் ஒரு முடிவு காணவேண்டும் என்பது உனக்குத் தெரிய வில்லையா?" என்றார் அவர்.

கடிகாரத்தின் மேல் மூடியை டக்கென்று மூடிவிட்டு, அந்த அறையின் மூலையில் இருளுக்குள் தெரியும் இரண்டாம் அலெக்ஸாந்தரின் சிலையைப் பார்த்தவாறே மேலும் பேசினார்:

"நீ கஷ்டப்பட வேண்டும் என்று நான் விரும்புவதாக நீ நினைக்கிறாய். நான்தான் உன்னைச் சிறையில் வைத்துப் பார்க்க வேண்டும் என விரும்புவதாக நீ கருதுகிறாய். நீ நினைப்பது பெருந்தவறு. நான் எதற்காக அப்படி விரும்ப வேண்டும்? நீ சிறையிலே கிடப்பதில் எனக்கென்ன லாபம்!"

"பின்னே என்னைப் போக விடும்?"

அவரது தெளிந்த முகத்தில் ஒரு நடுக்கம் பரந்தோடியது; அவரது இடது கண் இமைதட்டி மூடியது.

"என்னால் முடியாது!" என்று அவர் சொன்னார்; சொல்லும்போதே வரட்டுக் குரலில் இருமினார்; தமது உறுதியான விரல்களால் கன்னத்தைத் தடவிக் கொடுத்துக் கொண்டார். அவரது வலது கரத்தின் சுட்டு விரலில் கனமான மோதிரம் கிடந்தது; அது திருமண மோதிரமாகத் தானிருக்கவேண்டும்.

"உன் பிரயாணத்தைப் பற்றி எனக்குச் சரியான விளக்கம் வேண்டும்; நான் வெளியே போய் விட்டு, கால் மணி நேரத்தில் திரும்பி வருவேன். நான் போன பிறகு நன்றாக யோசித்துப் பார்; முடிவுக்கு வா. ஒரு வாக்கு மூலம் எழுதிவை."

அவர் கதவருகே சென்றார்; நின்றார். கதவின் கைப்பிடியைப் பிடித்துக் கொண்டே அமைதியாகச் சொன்னார்:

"பீட்டர்ஸ்பர்க்கில் எனக்கொரு மகன் இருக்கிறான்; அவன் ஒரு மாணவன். உன் வயதுதான் இருக்கும். ஒரு வேளை இதே சமயத்தில் அவனையும்கூட யாராவது ஒரு போலீஸ்காரன் குறுக்கு விசாரணை செய்து கொண்டிருக்கக்கூடும், தெரிந்ததா? சரி, பிறகு..."

அந்த அறையின் செம்புகை மண்டலத்தில் நான் ஒருவன் மட்டுமே நின்றேன். அவரது மகனைப் பற்றிய பிரஸ்தாபம் என் மனத்தில் எதையோ தொட்டு விட்டது போல் தோன்றியது.

"சரி, பிறகு..." என்ற வார்த்தைகள் என் நினைவில் எதிரொலித்துக் கொண்டிருந்தன. அதே வார்த்தைகள் ஒரு கேள்விக் குறியோடு என் முன் ஒலிப்பதாகத் தோன்றியது.

"சரி. பிறகு?"

கன்னங்கள் இரண்டும் ஊதிப்புடைத்துக் கப்பி நிற்க அந்தப் பாதிரி சுவரிலிருந்தவாறே என்னைக் குனிந்து பார்த்தார்; அந்தக் குதிரை கண்ணைச் சிமிட்டியது; அந்தத் தடித்த பெண் புன்னகை புரிந்து கொண்டே துணியற்று இருக்கும் தன் இடது தோளைப் பார்த்துக் கொண்டிருந்தாள். ஜன்னல் திரைகளைப் பாச்சைகள் அரித்துத் தின்று விட்டன. அந்தத் திரைகளில் தெரியும் சிறு சிறு துவாரங்களின் வழியே பார்வையைச் செலுத்தினால், வெளியேயுள்ள நீல வர்னத்தை ஓரளவு காண முடியும்.

அந்த அதிகாரி அடிக்கடி 'ஏன்' என்ற வார்த்தையையே பிரயோகித்தார். ஒரு போலீஸ்காரனின் அறையில் என்னைப்போல் அவரது மகனும் இருக்க நேர்ந்தால், அவனுக்கும் தான் எரிச்சலாக இருக்கும்.

வெளியே புறப்பட்டுச் சென்ற அதிகாரி கதவை முழுவதும் கூடத் திறந்து முடியவில்லை. அதற்குள் எங்கிருந்தோ உணர்ச்சி வெள்ள மயமாக ஒரு சங்கீத நாதம் அந்த அறைக்குள் மிதந்து வந்தது; யாரோ அந்த வீட்டின் வேறொரு அறையிலிருந்து பியானோ வாசித்துக் கொண்டிருந்தார்கள்.

எனக்குத் தாங்க முடியாத எரிச்சல் வந்தது; அந்த சங்கீதம் என்னை அழைத்தது; நான் எழுந்து நின்றேன்; வாசலுக்குப் போனேன். சூரிய ஒளி பளிச்சென்று வீசும் ஒரு அறையை எட்டிப் பார்த்தேன்.

திறந்த ஜன்னலுக்கு அப்பால், வசந்தத்தின் கோலாகலம் குலவையிட்டுக் கொண்டிருந்தது. பூ வேலை செய்தது மாதிரி மரங்களின் நிழல்கள் ஜன்னல் சட்டங்களிலும் தரையிலும் விழுந்து படிந்து கிடந்தன. எனக்கு எதிராக ஒரு சிறு கதவு இருந்தது. அதற்குப் பின்னுலிருந்து பூட்சுகளின் லாடச் சத்தமும், ஆண்களின் குரலும், ஜன்னலில் ஒட்டியிருந்த தாள் கிழிந்து போய் படபடக்கும் சத்தமும் கேட்டன. இந்தச் சத்தங்களெல்லாம் எனக்கு இடது புறமுள்ள அறையிலிருந்து வரும் சங்கீதத்தைக் கேட்க விடாமல் தடை செய்தன. அந்த அறையின் வாசலை மறைத்து, வெளிறி வெளுத்துப் போன ஒரு திரை தொங்கி ஊசலாடிக் கொண்டிருந்தது. அந்த சங்கீதம் என் பிரக்ஞை உணர்ச்சியையே மயக்கியது. நான் எங்கிருக்கிறேன் என்பதையே மறந்தேன்; அந்தத் திரையை விலக்கினேன்; அந்த அறைக்கு வெளியேயுள்ள கூடத்துக்கு வந்துவிட்டேன். கதவின் அருகே ஒரு உயரமான வேலி இருந்தது; அதன் மேல் பூங்கொத்துக்கள் படர்ந்து கிடந்தன. நான் அந்த வேலிக்கும், வாசல் நடையின் திரைக்கும் மத்தியில் நின்றேன். அங்கிருந்தவாறே அந்த சங்கீதத்தை என்னுல் நன்ருகக் கேட்க முடிந்தது; அந்தப் பூங்கொடியின் இலைச் செறிவுக்கு ஊடாக, அந்தப் பியானேவை வாசிக்கும் பெண்ணையும் என்னுல் பார்க்க முடிந்தது. நானிருந்த திசையில் அவளது முதுகுதான் தெரிந்தது. கழுத்தில் துணியில்லை. பலவர்ணக் கோலத்தோடு பளிச்சென்று தெரியும் ஒரு கீழை நாட்டுப் பட்டுத் துணிக் கச்சையை அவள் கட்டியிருந்தாள். அவளது சின்னஞ் சிறு தலையில் கன்னங்கறுத்த ரோமக்கற்றைகள் சுருள் சுருளாக அடர்ந்திருந்தன. அவள் தன் காது ஒருக்கச் சாய்த்து மிகவும் இங்கிதமாக வாசித்தாள்; அவள் வாசித்த பாவனை அவள் மறந்து போன ஏதோ ஒன்றை ஞாபகப்படுத்திக் கொள்ள முயல்வதுபோலத் தோன்றியது. அவளது பிஞ்சு

விரல்கள் தீர்மான கதியற்று, கீழ் ஸ்தாயி சுரக் கட்டைகளின் மீது உலவியது; அவளது வலது கரம் நிதானமற்று மத்திம ஸ்தாயியின்மீது விளையாடியது. வெகு நேரம்வரை நான் அவளது நடுங்கும் கரங்களையே கவனித்துக் கொண்டிருந்தேன். அவற்றின் அசைவிலே ஏதோ ஒரு குழப்பத்தை, கூச்சத்தை, சோகத்தை உணர்வதுபோல எனக்குப் பட்டது...

என்றாலும் பியானோவின் சுரக்கட்டைகளோ கெக்கலியோடு சிரிப்பதுபோலத் தோன்றின. ஆரம்பத்தில் அந்த கீதத்தின் மூர்ச்சை எனக்குப் பிடிபடவில்லை. அவளது ஆலாபனையின் ஆரோகண அவரோகணங்கள் தொடர்பற்று ஒலித்தன; கேந்திர சுரஸ்தானங்களின் ஆழ்ந்த நெடுமூச்சுக்கள் அழுத்தமாக எதையோ திரும்பத் திரும்பக் கூறுவதாகப் பட்டன. அந்த சங்கீதத்தின் பூர்ண வடிவமும் இலையுதிர் காலத்தைச் சித்தரிப்பது போலிருந்தது; அறுவடையான வயல்வெளி, வாடிப்போன புல்வெளி, குளுமையும் வாடையும் கலந்த ஊதைக் காற்று முதலியவற்றைப் பிரதிபலிப்பது போலத் தோன்றின. அந்த மனோ சித்திரத்தில், அந்த ஊதைக் காற்றின் ஸ்பரிஸத்தால் நடுங்குகின்ற காட்டு மரங்கள், அவை உதிர்த்துச் சிதறும் பொன்னிற இலைகள் எல்லாம் தெரிந்தன; தூரத்தில் எங்கோ கண்காணாத தேவாலயத்திலிருந்து சோகமயமாக மங்கி யொலிக்கும் கண்டாமணியோசையும் கூடக் கேட்பது போலிருந்தது...

அந்த வயல் வெளியில் தலையில் எதுவுமே அணியாமல் ஒரு மனிதன் நிற்கிறான். அவன் தன் கரங்களை ஆகாயத்தை நோக்கி உயர்த்தியவாறே, ஓடுகிறான்; அந்த ஊதைக் காற்று அவனை உந்தித்தள்ள ஓடுகிறான்; அடிக்கடி திரும்பித் திரும்பிப் பார்த்தவாறே ஓடிக் கொண்டிருக்கிறான். அவனோடு கூடவே மங்கிப் போய் இனந் தெரியாது ஒலிக்கும் ஒரு கர்ஜனைக் குரலும் தொடர்ந்து செல்கிறது; போகப் போக அந்த வயல் வெளி பெரிதாகிறது; அகன்று விரிகிறது......அந்த வயல் வெளியில் அந்த மனிதனின் உருவம் குறுகி, சிறிதாகி, தூரத்தில் சென்று சென்று மறைந்தே போய் விடுகிறது...

அந்தப் பெண் வாசிப்பதை நிறுத்திவிட்டு அசைவற்று உட்கார்ந்தாள்; அவளது கைகள் சோர்ந்து தொங்கின; அப்படியே அவள் வெகுநேரம் உட்கார்ந்திருந்தாள்.

நான் அவளைப் பூக்களுக்கு ஊடாக, எந்தவிதச் சிந்தனையுமற்றுப் பார்த்தேன்; என் இதயத்தில் ஒரு அழகிய எதிரொலி இன்னும் ஒலித்துக் கொண்டிருந்தது; என் நினைவில் இருந்ததெல்லாம் ஒன்றே ஒன்றுதான். எக்காரணம் கொண்டும் நான் என் மனதை இழந்துவிடக் கூடாது என்பதுதான்.

பிறகு அவளது வலது கை மீண்டும் ஒரு முறை மெதுவாக விருப்பற்று விழுவதுபோல, அந்த வாத்தியத்தின் சுரக் கட்டைகளின்மீது படிந்தது; மீண்டும் அந்த வெற்றிப் பெருமிதமான இசை மயக்கத்தில் நான் மூழ்கிவிட்டேன். நான் கேட்டேன்; கண்களை மூடியவாறே கேட்டுக் கொண்டிருந்தேன். ஒரு பெரிய ஜனத்திரள் வெள்ளம் ஒன்றுகூடி ஒரே மனதாக, யாரோ ஒருவனைச் சூழ்ந்து கொண்டு கோபமும் குழப்பமும் நிறைந்த கண்ணீரோடு அவனை மன்ருடிக் கொண்டிருப்பதுபோல் எனக்குத் தோன்றியது. அந்தச் சங்கீதம் வேகமும் கனமும் கொண்ட சக்தியாக விளங்கியது; இவ்வளவு சின்னஞ் சிறிய பெண்ணொருத்தி நெருப்புப் பிழம்பாக ஜொலிக்கும் சங்கீதத்தை வாசிப்பது எனக்கு அதிசயமாகப்பட்டது.

இந்த இரண்டாவது வாசிப்பும் என் பிரக்ஞை உணர்ச்சியை மழுங்க அடித்து மங்கச் செய்து விட்டது.

"வாசித்தது போதும், நிறுத்து, நடால்யா!" என்று அதிகாரி கோபத்தோடு இரைந்தார். அப்போது அவர் என்னருகே நின்று கொண்டிருந்தார்.

அவள் தன் தலையைத் திருப்பினாள்; எனினும் அவள் கரங்கள் வாத்தியத்தின் மீதே இருந்தன. அவளது முகம் சின்னஞ் சிறிதாக, ஒரு பறவையின் முகம்போல இருந்தது. நெற்றிப் பொருத்துக்கள் மிகவும் ஒடுங்கி யிருந்தன. அவளது மூக்குக் கூரியதாகவும், கண்கள் அகன்று நீல நிறமாகவும் இருந்தன.

"நான் 'அரெஸ்ட்' பண்ணிய அந்த மனிதன் எங்கோ ஓடிப் போய்விட்டான். பார்த்தாயா?" என்று கூறிக் கொண்டே, அறைக்குள் நடந்தார். ஒரு தடித்த புகைக் குழாயில் அவரது சிகரெட் புகைந்து கொண்டிருந்தது; லேசாக நடுக்கம் காணும் தமது விரல்களால் அவர் தமது தலையைத் தடவிக் கொடுத்துக் கொண்டிருந்தார்.

"ஓடிப் போய்விட்டானு?" என்று திடுக்கிட்டுப் போய்க் கேட்டாள் அந்தப் பெண்.

"அப்படித்தான் தெரிகிறது..."

அவர்கள் என்னைப் பற்றித்தான் பேசிக் கொண்டிருக்கிருர்கள் என்பதை நான் அதற்குள் உணர்ந்து கொண்டேன். என்றுலும் நான் உடனடியாக அந்த வேலிக்கும் திரைக்கும் இடையிலிருந்த மறைவிலிருந்து வெளிவர முடியவில்லை. அப்படி வந்தால் அது என்னவோ போலிருக்கும்; அவர்களுக்குத் திகைப்பாக இருக்கும்.

"அவன் எப்படிப் போஞன்?" என்று கேட்டாள் அவள்.

"ஜன்னல் வழியாக. அப்படித்தான் போயிருக்க வேண்டும்...அவன் ஒரு முழுப் பைத்தியம். அவன் நாசமாப் போக?" என்று கூறிக்கொண்டே அதிகாரி கதவின் அருகே வந்தார்.

அந்தப் பெண்ணும் இடத்தை விட்டு எழுந்து அவரைப் பின்பற்றிஞள். அவள் நடக்கும்போது தன் மேலாக்குத் துணியை மார்பின்மீது இழுத்து விட்டுக் கொண்டாள். இந்தச் சமயத்தில் நான் வெளியே வந்து அவர்கள் முன் எதிர்ப்பட்டேன்.

"அடப்பாவி! இங்கே என்ன பண்ணிக் கொண்டிருந்தாய்?" என்று திடீரென்று நின்று கொண்டே கூச்சலிட்டார் அதிகாரி.

அவரது கண்கள் இமை தட்டிச் சிமிட்டின. அவர் அந்தப் பெண்ணைப் பார்த்தார்; பிறகு தம் புருவங்களைக் கோபத்தோடு சுழித்தார்; தோள்களைச் சிலுப்பிக் கொண்டார்.

"நான் ஏதாவது தவருக நடந்திருந்தால் நீங்கள் மன்னிப்பீர்கள் என்றே நம்புகிறேன்" என்று நான் சொன்னேன்; அதற்குமேல் எதுவும் பேச எனக்கு விருப்ப மில்லை.

"சரி" என்று இழுத்தாற்போல் பேசிக்கொண்டே அவர் தம் சிகரெட்டைப் பற்ற வைத்தார்: "நீ செய்தது சரியா தப்பா என்பது எனக்குத் தெரியாது. ஆனுல், நீ இதுமாதிரி செய்திருக்கவே கூடாது..."

அவர் என் முகத்தைக் கூர்ந்து கவனித்து மௌனமாக இருந்தார். அந்தப் பெண் அவரோடு ஒட்டி நின்று கொண்டு, தணிந்த குரலில், எனினும் எனக்குக் கேட்கக் கூடிய குரலில் ஏதோ கேட்க ஆரம்பித்தாள்:

"இவனைத் தண்டிப்பார்களா?"

"சரி, தயை செய்து நீ கொஞ்சம் உள்ளே போ!" என்று கடுமையாகச் சொல்லி, அவளைத் தன்னிடமிருந்து விலக்கி, வாசலைக் காட்டினுர் அதிகாரி.

நான் அந்தச் சூரிய ஒளி மங்கிய அறைக்குள் வந்த பிறகு அவர் ஒரு புன்னகையோடு கேட்டார்:

"என்னை ஒரேயடியாய் பயமுறுத்தி விட்டாயே அப்பா, நீ ஒரு ரசமான பேர்வழி தான். சரி, உனக்கென்ன சங்கீதத்தில் அத்தனை பிரியமா?..."

"எனக்குச் சங்கீதம் கேட்பதற்கே சந்தர்ப்பம் வாய்க்க வேண்டுமே!"

"சரிதான், இன்று விசாரணை இத்துடன் நிற் கட்டும்."

மீண்டும் அவர் புன்னகை செய்தார்; கண்களை இரண்டு தடவை சிமிட்டிக் கொண்டார். பிறகு பேசினுர்:

"இந்த மாதிரி விஷயம் இருக்கிறதே, இது கடுமையான நடவடிக்கைகள் எடுக்கத் தூண்டுவதில்லை...நீ என் மனைவி யின் சங்கீதத்தை இன்னுமொருமுறை கேட்கும் சந்தர்ப் பத்தைப் பெறுவாய் என்றே தோன்றுகிறது. அவள்

எப்போதுமே இந்த நேரத்தில் தான் பாடுவது வழக்கம். சரி சரி இருக்கட்டும்...ஸால்டி கோவ்! இவனைக் காவலாளி யிடம் ஒப்படை!''

கொழுத்து வியர்த்துப்போன ஒரு போலீஸ்காரன், அவன்தான் ஸால்டிகோவ்—அவன் என்னை அதிசயம் தோய்ந்த கண்களோடு ஏற இறங்கப் பார்த்தான்; அவனது கண்களில் குடி மயக்கமும் குதூகலமும் குமிழிடுவது போலத் தோன்றின. பிறகு அவன் உற்சாகமாக அவருக் குப் பதிலளித்தான்:

''இதோ இப்போதே ஸார்!''

ஆனால் அவன் என்னைக் காரியாலயத்துக்குள் கடத் திச் சென்றபோது என்னைக் கண்டிப்பது மாதிரி பேசினான்:

''என்னப்பா புத்தி உனக்கு! இதென்னமோ ஒரு சந்தை அல்லது வேறெ என்னமும்னு நினைச்சி உலாத்திக் கிட்டிருந்தியா? உன் துணிச்சலுக்கு இது இடமில்லேப்பா. அதனாலெ, உனக்கு ஒரு பிரயோஜனமும் இல்லே, இதனாலெ உனக்கு என்னப்பா லாபம்?''

''நான் வெறுமனே சங்கீதம்தான் கேட்டுக் கொண் டிருந்தேன்...''

''ஒரு 'பார்க்'கிலே அதைக் கேட்கணும்!''

பிறகு அவன் என்னை அந்தக் காவலாளியை நோக்கிக் கல்தாக் கொடுத்துத் தள்ளிக்கொண்டே கூவினான்:

''பயல்களா, இவனைக் கொண்டு போங்கள்!''

